# தர்மசக்கரம்







பிங்கள ௵ புரட்டாசி மீ        சக்கரம் 26 ஆரம் 9

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை – 639 115    திருச்சி ஜில்லா

# சேலம் ஸ்ரீ சாரதா ஸ்தாபனங்களில் நவராத்திரி விழா
## 12—10—77 முதல் 20—10—77 வரை

*1977 ஆம் ஆ அக்டோபர் மாதம் 12, 13, 14 ஆம் தேதிகளில் கீழ்க்கண்ட சிறப்பு நிகழ்ச்சிகளுடன் நடைபெறும். அன்பர்களும் தாய்மார்களும் விழாவில் கலந்துகொண்டு திருவருளைப் பெறுமாறு அழைக்கின்றோம்.*

### சிறப்பு வழிபாடு நிகழ்ச்சி நிரல்

| தேதி | நேரம் | மணிமுதல் | மணிவரை | இடம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|---|---|
| 12-10-77 | பகல் | 11.00 | 12-00 | ஸ்ரீ ஸாரதா கல்லூரி | லலிதா ஸஹஸ்ரநாம விளக்க உரை |
| | ,, | 12 00 | 1-00 | ,, | லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனை |
| | மாலை | 6.00 | 7-30 | ஸ்ரீ ஸாரதா வித்யாலயம் | ,, அர்ச்சனை, தீபாராதனை |
| 13-10-77 | பகல் | 11 30 | 12 30 | ,, | ,, ,, ,, |
| | மாலை | 3.00 | 4-00 | ஸ்ரீ ஸாரதா கல்லூரி | லலிதா ஸஹஸ்ரநாம விளக்க உரை |
| | ,, | 4.00 | 5.00 | ,, | லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனை |
| | ,, | 6.00 | 7-00 | ஸ்ரீ ஸாரதா வித்யாலயம் | ,, ,, ,, |
| 14-10-77 | பகல் | 11.00 | 12-00 | ,, | ,, ,, விளக்க உரை |
| | ,, | 12 00 | 1.00 | ,, | ,, ,, அர்ச்சனை |
| | மாலை | 6.00 | 7-30 | ஸ்ரீ ஸாரதா வித்யாலயத்தில் கலா நிகழ்ச்சிகள். | |

குறிப்பு:— லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனையும், விளக்க உரையும் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களால் நடைபெறும். 14—10—77ஆம் தேதி மாலை ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்களின் மாணவிகளால் கலாநிகழ்ச்சியும் நடைபெறும்.

---

# திருப்பராய்த்துறை, ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
## அந்தர்யோகம்

*1977ஆம் ஆ நவராத்திரி பூஜையின் கடைசி மூன்று தினங்களாகிய அக்டோபர் மாதம் 18, 19, 20 தேதிகளில் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி இங்கு அந்தர்யோகம் நடைபெறும். இதில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் அக்டோபர் மாதம் 17ஆம் தேதி திங்கள்கிழமை இரவே நேரில் நாள் ஒன்றுக்கு ரூ. 4-00 விதம் ரூ. 12-00 உணவுக்காகச் செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்துகொள்ளவேண்டும். தாய்மார்களுக்கும் இதில் இடமுண்டு. பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள்.*

### வாழ்க்கை முறை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காலை | 6 மணிமுதல் | | 7 மணிவரை | | தியானம் |
| ,, | 8 | ,, | 9 | ,, | பஜனை |
| ,, | 9 | ,, | 10 | ,, | லலிதாநாம விளக்க உபந்யாசம் |
| ,, | 11 | ,, | 12 | ,, | அர்ச்சனை |
| மாலை | 2 | ,, | 3 | ,, | லலிதாநாம விளக்க உபந்யாசம் |
| ,, | 5 | ,, | 6 | ,, | அர்ச்சனை |
| ,, | 6 | ,, | 7 | ,, | தியானம் |
| இரவு | 8 | ,, | 9 | ,, | பஜனை |

*தியானம், லலிதாநாம விளக்க உபந்யாசம், அர்ச்சனை, பஜனை இந்த நிகழ்ச்சிகள் நடைபெறும் நேரங்கள் போக பாக்கியிருக்கும் 16 மணி நேரத்தில் இடைவிடாது நாம ஜபம் நடந்துகொண்டிருக்கும். அந்தர்யோகத்தில் கலந்துகொள்ளும் அன்பர்கள் ஒவ்வொருவரும் காலையில் ஒருமணி நேரமும், மாலையில் ஒருமணி நேரமும் அகண்டநாம பஜனையில் கலந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இரவு 10 மணிமுதல் காலை 4 மணிவரையில் மாணவர்கள் செய்யும் நாமபஜனையில் அன்பர்கள் தங்களுக்கு வசதிப்பட்டால் கலந்துகொள்ளலாம். தாய்மார்கள் இரவு 10 மணிமுதல் காலை 6 மணிவரை நடைபெறும் நாமஜபத்தில் கலந்துகொள்ளமாட்டார்கள்.*

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

சக்கரம் 26 | பிங்கள ஹூ புரட்டாசி மீ | ஆரம் 9

பொருளடக்கம் பக்கம்



## சந்தா விவரம்

### *1. ஆண்டு சந்தா ரூ. 10*

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

### *2. சகாய சந்தா ரூ. 5*

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

### *3. டிபாஸிட் சந்தா ரூ. 100*

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00 வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

## அந்தர்யோக விவரங்கள்

திருச்சி-கைலாசபுரம் 25—9—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: பாய்லர் பிளாண்ட் ஆரம்பப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் பகல் 1-00 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

திருநெல்வேலி ஜில்லா—தூத்துக்குடியில் 25—9—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: கிரேட் காட்டன்ரோடு, காரப்பேட்டை எலிமெண்டரி ஸ்கூல்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்**

மதுரை ஜில்லா—திருவாதவூரில் 25—9—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: அருள்திரு திருமறைநாத சுவாமி கோவில்*
*நேரம்: காலை 10-00 மணி முதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்**
*பகல் உணவிற்கு ரூ. 1-00 நேரில் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்*

மதுரை ஜில்லா—தேனியில் 28—9—77 புதன்கிழமை

*இடம்: ஸ்ரீ கணேச கந்தப்பெருமாள் ஆலயம்*
*நேரம்: காலை 9-00 மணிமுதல் மாலை 4-00 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்**
*நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 2—10—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: விவேகானந்த கல்லூரி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்**
*உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

பெங்களூரில் 9—10—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: கண்டோன்மெண்ட் அஜந்தாடாக்கீஸ் எதிரிலுள்ள ஒடுக்கத்தூர் சுவாமிகள் [மடம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

விருதுநகரில் 9—10—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: பெரிய காளியம்மன் கோவில் தெருவிலுள்ள காளியம்மன் கோவில்*
*நேரம்: காலை 9-30 மணிமுதல் பகல் 12-00 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி சாந்தானந்தர்**
*குறிப்பு: மாலை 6 மணி முதல் ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாம அர்ச்சனை நடைபெறும்.*

சேலம் ஜில்லா—நாமக்கல் வட்டம் கந்தகிரியில் 13—10—77 வியாழக்கிழமை

*இடம்: வள்ளலார் சன்மார்க்க சங்கம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்**

திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 16—10—77 ஞாயிற்றுக்கிழமை

*இடம்: ரயில்வே ஸ்டேசனுக்கருகிலுள்ள லாயல்மில் ஆரம்பப்பாடசாலை*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்**



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 26 | பிங்கள ஹூ புரட்டாசி மீ | ஆரம் 9

## பிரார்த்தனை

अखण्डमण्डलाकारं व्याप्तं येन चराचरम् ।
तत् पदं दर्शितं येन तस्मै श्रीगुरवे नमः ॥

அகண்ட மண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம் ।
தத் பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

அசைவன அசையாதன யாவையும் தன்னகத்து அடக்கியுள்ள அகண்ட வஸ்துவை அனுபூதியில் அடையப்பண்ணியவர் குரு. ஆதலால் அவருக்கு வணக்கம்.

அண்டபகிரண்ட மறியாத
நின் வடிவைக்
கண்டவரைக் கண்டாற்
கதியாம் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

உடைமைகளுள் பெரியது சத்தியம்.

ஆராத்துயரத்தை ஆற்றவல்லது காலம்.

அன்னை பராசக்தியை அறிகிறவன் மைந்தன் முருகனை அறிபவனாகிறான்.

நல்ல மனம் படைத்திருப்பவன் வற்றாத செல்வம் படைத்தவனாகிறான்.

சுவாசிப்பதற்கு நிகராக மேலான எண்ணங்கள் சதா உள்ளத்தில் உதித்துக்கொண்டிருக்கவேண்டும்.

மயக்கத்தை ஒழித்து உள் ஒளியில் ஊறியிருப்பவன் காட்டுத்தீ போன்று பந்தபாசங்களைப் பொசுக்குகிறான்.

சுயநலக்காரன் பிறர் செய்த தீங்கை மறப்பதில்லை. சுயநலமற்றவன் அதை அப்போதைக்கப்போது மறக்கிறான்.

உடலை ஒட்டிய இன்பங்கள் மறைத்து வைக்கப்படுகின்றன. ஆத்மனை ஒட்டியவைகள் விளம்பரப்படுத்தப்படுகின்றன.

பிறர் படைத்துள்ள உடைமைகளைக் குறைக்க முயலலாகாது. ஆனால் தன் உடைமைகளைக் குறைப்பதற்கேற்ப மனிதனுக்கு மனபரிபாகம் வருகிறது.

இயற்கை முழுவதும் உண்டுபண்ணுகிற ஓசையின் தொகை ஓம் அல்லது பிரணவம். ஆகையால் அது சமயங்கள் அனைத்துக்கும் பொதுவான மந்திரமாகிறது.

மிகைப்பட்ட மென்மையும், மிகைப்பட்ட வன்மையும் நல்வாழ்வுக்கு உதவமாட்டா. சந்தர்ப்பத்துக்கேற்றவாறு நடவடிக்கையை மாற்றியமைக்கவேண்டும்.

நூலறிவை மனப்பாடம் பண்ணியவன் அறிஞன் ஆகான். உள்ளிருக்கும் பரமனோடு இணக்கம் வைத்தவனே கற்றவன். அவன் பகருவதில் புதுமை பொலிகிறது.

ஒவ்வொரு வீட்டிலும் சாக்கடை உண்டு. அதே பாங்கில் ஒவ்வொரு வனிடத்திலும் குறைபாடு உண்டு. குறைபாட்டைப் பொருள் படுத்தாது நிறை நிலையையே கருத்தில் வாங்குக.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

*1884*-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 18ஆம் தேதி சனிக்கிழமையன்று நிகழ்ந்த சம்பாஷணை வருமாறு:

அன்றைய இரவு காளிகாதேவியின் வழி பாட்டுக்குரிய காலமாகும். தீபாவளிப் பண்டிகையைத் தொடர்ந்து வருகிற அமாவாசை இரவு இந்த வழிபாட்டுக்குரிய புண்ணிய நேர மாகும். இரவு பதினொரு மணிக்கு அம்பிகையின் வழிபாடு ஆரம்பிக்கப்பெற்றது. இதில் கலந்து கொள்ளுதல் பொருட்டு அன்பர்கள் பலர் சூரிய அஸ்தமனத்துக்கு முன்பே தக்ஷிணேசுவரத்தில் காளிகாதேவியின் சந்நிதிக்கு வந்து சேர்ந்திருந்தனர். அன்றிரவு புண்ணிய நேரத்தில் பரமஹம்சதேவரைத் தரிசிக்க அவர்கள் விருப்பம் பூண்டிருந்தனர்.

மகேந்திரநாத் குப்தர் அன்று இரவு சுமார் எட்டு மணிக்குத் தன்னந்தனியராகத் தக்ஷிணேசுவர ஆலயத்துக்கு வந்து சேர்ந்தார். ஆலயமெங்கும் வழிபாட்டுக்குரிய அறிகுறிகள் தென்பட்டன. ஆங்காங்கு தீபங்கள் ஏராளமாக ஏற்றி வைக்கப்பட்டிருந்தன. ஆலயத்தின்கண் அமைக்கப்பெற்றிருந்த அம்பிகையின் சந்நிதி, ராதாகிருஷ்ணன் சந்நிதி, சிவனாரின் சந்நிதிகள் ஆகியவைகளில் பிரகாசமான தீபங்கள் எரிந்து கொண்டிருந்தன. வாத்தியங்கள் வாசிப்பதற்கு உற்ற இடமாகிய நகபத்கானாவிலிருந்து இன்னிசைக் கருவிகள் ஒலித்துக் கொண்டிருந்தன. ஆலய நிர்வாகிகள் அவசர அவசரமாக இங்குமங்கும் நடமாடிக்கொண்டிருந்தனர். நான்கு ஜாமங்களில் காளிகா தேவியின் பூஜை முற்றுப்பெற்றன உடனே அதிகாலையில் விடிவதற்கு முன்பே நாடகம் ஒன்றை நடாத்துவதற்கான ஏற்பாடுகள் வடிவெடுத்து வந்தன. அக்கம்பக்கங்களிலுள்ள ஊரார்கள் அந்த நாடகத்தைப் பார்ப்பதற்கு வந்து கூடிக்கொண்டிருந்தனர். ஆடவர், மகளிர், இளைஞர்கள் முதியவர்கள் ஆகிய எல்லாரும் திரள் திரளாக வந்து கொண்டிருந்தனர். அம்பிகை வழிபாடு ஆரம்பிப்பதற்கு முன்பு ராஜ்நாராயணன் என்பார் இன்னிசைக் கருவியின் துணைகொண்டு தேவி மகாத்மியத்தை இனிது நிறைவேற்றி வைத்தார். அப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சதேவரும் அந்த நிகழ்ச்சியில் கலந்துகொண்டார். பக்தர்கள் பலர் அந்தக் கருணாமிர்தத்தை ஆர்வத்துடன் ரசித்து வந்தனர். அந்நிகழ்ச்சியானது பரமஹம்சருக்குப் பரமானந்தத்தையூட்டியது. அம்பிகைக்குரிய வழிபாடு துவங்கியபொழுது அவர் ஆனந்தப் பரவசத்தில் மூழ்கியிருந்தார்.

மகேந்திரநாதர் பரமஹம்ச தேவருடைய அறைக்குள்ளே போன பொழுது அவர் சிறிய கட்டிலின்மீது அமர்ந்திருந்தார். பாபுராம், விஜயகோபால், ஹரிபாதர், கிஷோரி, நிரஞ்சனனுடைய உறவினர் ஒருவர், அரியதாஹாவிலிருந்து வந்திருந்த இளைஞன் ஒருவன், இன்னும் சில பக்தர்கள் ஆகிய இவர்கள் யாவரும் தரையின் மீதமர்ந்து கொண்டு பரமஹம்சதேவரைப் பார்த்த வண்ணமாயிருந்தனர். ராம்லாலரும், ஹஸ்ராவும் இடையிடையே அறைக்குள் வருபவர்களாகவும், போகிறவர்களாகவும் தென்பட்டனர். பரமஹம்சதேவருடைய ஆணைக்கு உட்பட்டவராக நிரஞ்சனனுடைய இளம் உறவினன் அவர் முன்னிலையில் அமர்ந்து தியானம் பண்ணிக் கொண்டிருந்தான். மகேந்திரர் பரமஹம்ச தேவர் முன்னிலையில் வீழ்ந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து விட்டு ஓரிடத்தில் அமர்ந்தார். நிரஞ்சனனுடைய இளம் உறவினன் தியானத்தை முடித்துக்கொண்டு பரமஹம்ச தேவரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு போகும் தறுவாயில் இருந்தான். அரியதாஹாவிலிருந்து வந்திருந்த இளைஞனும் அங்ஙனமே புறப்பட்டுப் போக ஆயத்தப்படுத்திக் கொண்டிருந்தான்.

"நீ மீண்டும் எப்பொழுது வருவாய்?" என்று பரமஹம்சதேவர் நிரஞ்சனனுடைய உறவினனிடம் விசாரித்தார்.

உறவினன்: "ஒருவேளை அடுத்த திங்கட் கிழமை வருவேன்!"

பரமஹம்சதேவர் (ஆவலுடன்): "நீ லாந்தர்

ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு போவது அவசியமல்லவா ?''

உறவினன் : ''இல்லை ஐயனே. இந்த ஆலயத்துக்கு அருகாமையில்தான் நான் வசித்து வருகிறேன். லாந்தர் ஒன்று எனக்குத் தேவையில்லை.''

பரமஹம்சதேவர் (அரியதாஹாவிலிருந்து வந்திருந்த இளைஞனைப் பார்த்து): ''நீயும் புறப்பட்டுப் போகின்றாயா ?''

இளைஞன்: ''ஆம் ஐயனே எனக்குச் சிறிது சளி பிடித்திருக்கிறது.''

பரமஹம்சதேவர் : ''அப்படியா ? தலையை மூடிக்கொள்.''

அவர்களிருவரும் பரமஹம்ச தேவரை வணங்கி விட்டு விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டனர்.

அந்த அமாவாசை இரவு ஆத்ம சாதனத்துக்கு ஏற்றதாக இருந்தது. உள்ளத்தைக் கவர்ந்து அதீதத்தின்கண் எடுத்துச் செல்ல வல்லதாக அவ்இரவு விளங்கிற்று. அதற்கு அனுசரணையாக நிகழ்ந்த அம்பிகையின் வழிபாடு ஆத்ம சாதகர்களுடைய உள்ளத்தில் அருள் நாட்டத்தை ஆழ்ந்து வளர்ப்பதாயிற்று. சிறிய கட்டிலின்மீது பரமஹம்சதேவர் அமர்ந்திருந்தார். அவருடைய மனது முற்றிலும் அந்தர்முக திருஷ்டியில் மூழ்கியிருந்தது. இடையிடையே ஏதோ சில வேளைகளில் அவர் பக்தர்களோடு இரண்டொரு வார்த்தை சொல்லித் தமது மனதைப் புறஉலகத்திற்கு இழுத்து வந்தார். இப்பொழுது கருத்து ஒன்றை ஆங்குக் குழுமியிருந்த பக்தர்களிடம் தெரிவித்தார். அதாவது : ''ஆ அந்த இளைஞன் ஆழ்ந்து தியானத்தில் அமர்ந்திருந்தான். (ஹரிபாதரைப் பார்த்து) அப்படியல்லவா?''

ஹரிபாதர் : ''ஆம் ஐயனே. நெடு நேரத்துக்கு அவன் அசைவற்று மரக்கட்டை போன்று அமர்ந்திருந்தான்.''

பரமஹம்சதேவர்: (கிஷோரியைப் பார்த்து): ''அந்த இளைஞன் உனக்குஅறிமுகம் ஆகியிருக்கிறனு? நிரஞ்சனனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவன் அவன்.''

மறுபடியும் அறையின் கண் அமைதி நிலவியது. ஹரிபாதன் பரமஹம்சதேவருடைய பாதங்களை இலேசாக அமுக்கிக்கொண்டு இருந்தான். அவ் இரவுக்கு முந்திய பிற்பகலில் தேவி மகாத்மியம் ஓதப் பெற்றதைப் பரமஹம்சர் காதுகொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தார். அதில் சில பகுதிகளை அடங்கிய குரலில் அவர் தமக்குத் தாமே ஓதிக் கொண்டிருந்தார். இன்னிசையுடன் கூடிய மெல்லிய குரலிலே அவர் பாடியதாவது:

''அன்னை பராசக்தி காளிகாதேவியை யார் தான் அறியவல்லவர். அவளுடைய மகிமையை விளக்க ஆறுதர்சனங்களே திணறுகின்றன...''

பரமஹம்சதேவரிடம் புதிய உற்சாகம் கிளம்பிற்று. அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார். பேர் ஆர்வத்துடன் அன்னை பராசக்தியைப்பற்றி அவர் பாடியதாவது :

''காளிகாதேவி தன்னுடைய கிருத்தியங்களில் பேர் ஊக்கம் படைத்தவளாக இருக்கிருள். பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பது அவளுக்கு விளையாட்டாக வாய்த்திருக்கிறது. அன்னையின் மாயா சக்தியில் மூவுலகங்களும் மயங்கிக் கிடக்கின்றன. பித்துப் பிடித்தவள் போன்று அவள் தென்படுகிருள். அவளுடைய கணவனுகிய சிவபெருமானும் பித்துப் பிடித்தவர் போன்று தென்படுகிருர். அம்பிகைக்கு வாய்த்துள்ள சிஷ்யர்களிருவரும் பித்துப் பிடித்தவர்கள் போன்று தென்படுகின்றனர். அவளுடைய லாவண்யத்தை யாரே விளக்க வல்லவர்! அவளுடைய மகிமைகள் யாருடைய உள்ளத்துக்கும் எட்டமாட்டா. அவளுடைய மேனியில் தென்படும் அசைவுகளை யாராலும் அறிந்துகொள்ள முடியாது. இவையாவுக்கும் மேலாக அம்பிகையின் மனப்பான்மைகளை யார்தான் ஊகித்து அறிந்துகொள்ள முடியும்! உலகை உய்வித்தல் பொருட்டுச் சிவனுர் விஷத்தை எடுத்து விழுங்கினுர். தொண்டையில் தங்கியிருந்து அது அவரைத் திகைக்கச் செய்தது. அந்த விஷத்தின் கொடுமையைத் தடுத்தல் பொருட்டு அம்பிகையின் திருநாமத்தை அவர் திரும்பத் திரும்ப ஓதினுர்.

''சாகார சொரூபிணியாக இருப்பவள் அம்பிகை. நிர்க்குண நிராகார சொரூபிணியாக இருப்பவளும் அம்பிகை. அவளுடைய பேரமைப்பில் இந்த இரண்டு சொருபங்களும் சேர்ந்தே இடம்பெற்றிருக்கின்றன. சமயங்களில் அமைந்துள்ள தத்துவங்கள் யாவுக்கும்

அவள் ஆமோதிப்புத் தருகிறாள். மனிதனுக்கு உற்ற தர்மம் யாது என்பதை அவள் ஐயம் திரிபு அற விளக்கிக்கொண்டிருக்கிறாள். தர்மத்துக்கு விளக்கம் தருவதில் அவள் எப்பொழுதாவது சோர்வுஅடைவது கிடையாது. வாழ்வு என்னும் கடலிலே உன்னுடைய வாழ்வு என்னும் படகை மானுடா, நீ நன்கு செலுத்துவாயாக. சந்த்ரோதயத்தை அனுசரித்துக் கடலில் உயர்வு தாழ்வு மாறி மாறியமைகின்றன. அதே போன்று மானுட வாழ்க்கையிலும் உயர்வு தாழ்வு மாறி மாறி அமைகின்றன. அம்மாற்றங்களை முன்னிட்டு மானுடா, நீ மனக்கிலேசம் கொள்ளாதே. அம்பிகையின் சாந்நித்தியத்தை நாடி உன்னுடைய படகை நீ ஊக்கத்தோடு செலுத்துவாயாக.''

இப்பாடலைப்பாடிய பரமஹம்சருக்குஆனந்த பரவசம் மேலிடுவதாயிற்று. பரவசநிலையினின்று அவருடைய மனது சிறிது கீழே இறங்கி வந்தபொழுது அவர் இத்தகைய பாடல்களைப் பக்தி பூர்வமாகப் பாடுவது நல்ல ஆத்ம சாதனமாகும் என்று இயம்பினர். இன்னும் சில பாடல்களை அவர் உள்ளக் கசிவுடன் பாடுவாராயினர். அவைகளுள் ஒன்றன்கருத்து வருமாறு:

''இப்பொழுது ஓ தாயே, உன்னை எடுத்து நான் விழுங்கப் போகிறேன்! ஏனென்றால் ஒரு தீய நட்சத்திரத்தில் நான் பிறந்தவனாகிறேன். அந்தத் தீய நட்சத்திரத்தில் பிறந்தவன் தன் தாயை எடுத்து விழுங்குவான். அத்தகைய போக்கிரியாக அவன் அமைவான் என்று ஜோதிடம் சாட்டுகிறது. நான் ஒரு போக்கிரியாக இருந்துகொண்டு பரதேவதையாகிய உன்னை எடுத்துப் புசிக்கப் போகிறேன்.''

தீவிரமான பக்தி இவ்வாறெல்லாம் தெய்வத்தோடு இணக்கம் வைக்கும்படி தூண்டுகிறது என்பது இதினின்று வெளியாகிறது.

மற்றும் ஓர் பாடலை அவர் பாடினர். அதன் உட்கருத்து வருமாறு: ''காளிகாதேவியே, என்னை ஈன்றெடுத்துள்ள அருள் தாயே, நீ முற்றிலும் ஆனந்த சொருபிணியாக இலங்குகின்றாய். எல்லாம் வல்ல சிவனாரை உனக்கு உரியவராக அவரைக் கவர்ந்திழுக்கும் மோகன சக்தி உன்னிடத்துள்ளது! ஆனந்த பரவசம் பூண்டவளாக நீ நடனம் புரிகின்றாய். கை கொட்டிக்கொண்டு நீ நடனம் புரிகின்றாய். கைகூப்பிக்கொண்டும் நீ நடனம் புரிகின்றாய்.''

மேலும் அவர் பாடியதாவது: ''அந்திய காலத்தில் அன்னை காளிகாதேவியின் நாமத்தை உச்சரித்துக்கொண்டு நான் உடலை உகுப்பேனாகில் எனக்குச் சிவசாயுஜ்யம் வாய்க்கும். அத்தகைய எனக்குப் பிறகு காசிவாசம் எதற்காக? அன்னை காளிகாதேவியின் மகிமைகள் எண்ணிக்கையில் அடங்கா. அவளுடைய சிறப்புக்களை எடுத்து ஓதி அவைகளுக்கு ஒருமுடிவு காணுவது யாருக்குத்தான் இயலும்! அன்னை காளிகா தேவியின் விபூதிகளுள் மிகச்சிறிய பகுதிகளை ஆராய்ந்து அறிந்துகொண்ட சிவனார் ஆனந்த பரவசம் அடைந்தவராக அவளுடைய திருவடிகளில் சவம் போன்று படுத்துக் கிடக்கிறார்.''

இப்படியெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகப் பரமஹம்சதேவர் பாடிய பாடல்கள் ஒரு முடிவுக்கு வந்தன. அதன் பிறகு ராஜ்நாராயணருடைய புதல்வர்கள் இருவர் அறையினுள் பிரவேசித்துப் பரமஹம்சதேவரின் முன்னிலையில் வீழ்ந்து வணங்கினர். ராஜ்நாராயணர் முந்திய பிற்பகலில் அம்பிகையின் மகிமைகளைக் குறித்துப் பாடியபொழுது இப்புதல்வர்கள் இருவரும் அப்பாடல்களில் கலந்து கொண்டனர். இந்த இளைஞர்களோடு கூடிக்கொண்டு பரமஹம்சதேவர் காளிகா தேவியின் மகிமையைக் குறித்து மற்றும் ஒரு பாடல் பாடினர். அப்பாடலில் அடங்கியிருந்த முக்கிய கருத்தாவது: ''சிருஷ்டிக்கப்பட்டுள்ள ஜகத், ஜீவன்களாகிய அனைத்தும் அம்பிகையின் விளையாட்டாக வாய்த்தவைகளாம்...... இளைய சகோதரன் ஸ்ரீ கௌராங்க தேவரைப்பற்றிப் பாடல் ஒன்று பாடும்படி பரமஹம்ச தேவரிடம் பணிவுடன் வேண்டிக்கொண்டான். அதற்கு இணங்கிப் பரமஹம்சரும் பாடுவாராயினர். அப்பாடலின் உட்கருத்தாவது:

''கௌராங்க, நித்தியானந்த நீங்கள் இருவரும் பாக்கியவான்களாகிய சகோதரர்கள்! அன்பே வடிவெடுத்தவர்கள் நீங்கள் என்பதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதலால் நான் இப்போது உங்களை அணுகுகிறேன். நீங்கள் படைத்துள்ள அன்பைப்பெற நான் ஆசைப்படுகிறேன். என்மீது கிருபை வைப்பீர்களாக.''

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது)

326. பந்தமெலாந் தீரப்
பரஞ்சோதி நீ குருவாய்
வந்த வடிவை
மறவேன் பராபரமே.

பரஞ்சோதி என்பது என்ன என்பதை அறிந்துகொள்வது அவசியமாகிறது. பொறி புலன்களுக்கு அப்பால் உள்ளது எதுவோ அது பரம் எனப் பகரப்பெறுகிறது. பொறி புலன்களுக்கு அப்பால் ஏதேனும் இருக்கிறதா என்னும் கேள்வி எழுகிறது. நிச்சயமாக அப்பால் ஒன்று உள்ளது. யுக்தியைக் கொண்டு அதைக் கிரஹிக்க முயலுவோம். காரிருளில் ஒருவன் ஓரிடத்தில் அமர்ந்திருக்கிறான். அவனைத் தேடிப்பிடிக்க வந்தவர்கள் அவன் இங்கு இல்லை என்று தங்களுக்குள் பேசிக்கொள்ளுகிறார்கள். அப்பேச்சு இம் மனிதன் காதில் படுகிறது. தான் இருப்பதைப் பற்றி இவனுக்குச் சந்தேகமில்லை. தன் உடலே அவனுக்குக் கட்புலனாவதில்லை. அப்படியிருந்தும் தான் இருப்பதைப்பற்றி அவன் சந்தேகப் படுவதில்லை. இருக்கிறேன் என்கிற உணர்வு ஆத்மாவுக்கு உரியது. அதைச் சுட்டிக்காட்டுதற்கு சூரியன், சந்திரன், அக்னி, நட்சத்திரம், மின்னல் முதலியன உதவமாட்டா. தான் இருப்பதைத் தானே சுட்டிக்காட்டுகிறது. அது சுயஞ்சோதி. ஒவ்வொரு மனிதனும் சுயஞ்சோதியாயுள்ள ஆத்மசொரூபம். அது பொறிபுலன்களில் கட்டுப்படாதிருப்பதால் அதைப் பரஞ்சோதி என்றும் பகரலாம். பரஞ்சோதி சொரூபமாக இருக்கிற மூர்த்தி ஒருவர் புறத்தில் தென்படுகிறார். அவர் தேகத்தில் கட்டுண்டு இருப்பவர் அல்லர். ஆத்மதிருப்தராக இருக்கிறார். பந்தபாசம் எதுவும் அவருக்கு இல்லை. பக்குவமடைந்துள்ள சிஷ்யன் ஒருவன் அத்தகைய பரஞ்சோதி முனிவரைப் பார்க்கிறான். அவர் இருக்கிற பெருநிலையில் தானும் இருக்க முடியும் என்று சிஷ்யன் அறிகிறான். தனக்குப் பந்தத்தை உண்டுபண்ணியது தன்னுடைய மனது. அந்த மனதை ஒதுக்கித் தன்னும் சுதந்திரம் எப்பொழுதும் எல்லார்க்கும் உண்டு. குருவைப் பார்த்த சிஷ்யன் இவ் உண்மையை அறிந்துகொண்டான். உடனே பந்தத்தை உதறித் தள்ளினான். சுதந்திர சொரூபமாயிருந்த பரஞ்சோதிமூர்த்தியைக் குருவாக அறிந்துகொண்டான். அந்த அனுபவம் அவனைவிட்டு ஒருபொழுதும் மாறவில்லை. வெளிச்சம் வந்த இடத்தில் இருள் மறைவது போன்று பக்குவமடைந்துள்ளவனுடைய பந்தமும் அக்கணமே அகன்று போகிறது என்பது இக்கண்ணியின் கருத்து.

327. தானந்த மான
சகச நிரு விகற்ப
ஆனந்த நிட்டை அருள்
ஐயா பராபரமே.

வேதத்தின் அந்தமாய் இருப்பது வேதாந்தம். அதேபாங்கில் நிஷ்டைகளுள் எது அந்தமானதாக இருக்கிறதோ அதுதான் அந்தமான நிஷ்டையென நவிலப் பெறுகிறது. அந்த மேலான நிஷ்டை சகஜ நிஷ்டை என ஆரம்பிக்கிறது. சகஜ என்றால் தன்னுடன் ஜனித்த அல்லது தன்னுடனேயே உருவெடுத்துள்ள நிஷ்டை எனப் பொருள்படுகிறது. வேறு ஓர் இடத்தில் சகஜ நிஷ்டைக்கும் என் சிந்தைக்கும் வெகுதூரம் என்கிறார் தாயுமானவர். சிந்தையில் உதிக்கிற ஒவ்வோர் எண்ணமும் உணர்வும் அறிவும் இறைவனுக்கு உரியவைகள் என்று கருதுவது சகஜ நிஷ்டை ஆகும். இதற்கு அனுசரணையாக ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்குப் பகவத்கீதையில் ' நீ எதைச் செய்கின்றாய், எதை அருந்துகின்றாய், எதை வேள்வியாக வேட்கின்றாய், எதை தானமாகச் செய்கின்றாய், எதைத் தபசாகப் புரிகின்றாய். அவை யாவையும் எனக்கு அர்ப்பணம் பண்ணு' என்று இயம்புகிறார். மனிதனொருவன் தான் புரிகிற கர்மத்துக்குத் தன்னைக் கர்த்தாவாக வைத்துக்கொள்ளுகிற பொழுது அவன் இன்ப துன்பங்களுக்கு ஆளாகிறான். மனம், மொழி, மெய்யாகிய திரிகரணங்களின் மூலம் தன்னிடம் நிகழ்கின்ற கிருத்தியங்களனைத்தும் இறைவனுக்கு உரியவைகள் என்னும் மனநிலையில் உறுதிபெற்று இருப்பவன் சகஜ நிஷ்டையில் நிலைத்திருப்பவன்

ஆகிருன். யான் எனது என்னும் அகங்காரம், மமகாரம் அறவே அகன்று போகுமிடத்தே சகஜ நிஷ்டை சாத்தியமாகிறது. சகஜ நிஷ்டையில் உறுதி பெற்றிருப்பவனுக்குப் பாபம், புண்ணியமாகிய இருவினைகள் இல்லை. பீஷ்மர் இதற்கு நல்ல சான்று ஆவார். துரியோதனனுக்காக அவர் சேனுபதியான பாபச்செயல் அவரைத் தீண்டவில்லை. பிறகு யுதிஷ்டிரனைச் சிம்மாசனத்தில் அமர்த்திய புண்ணியச் செயலும் அவரைத் தீண்டவில்லை. தம்மைக் கருவியாக வைத்துக்கொண்டு மகாபாரதத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் கிருஷ்ணபரமாத்மாவின் செயல்கள் என்னும் எண்ணத்தில் அவர் நிலைபெற்றிருந்தார். அது சகஜநிஷ்டையாகும். பிறகு மனேவேகம் ஓயுமிடத்து அது நிர்விகல்ப நிஷ்டை அல்லது நிர்விகல்ப சமாதியாகிறது. நிர்விகல்ப சமாதியில் மனது ஓய்ந்து போகிறது. ஆதலால் செயல்கள் யாவும் தாமாகவே அடங்கிவிடுகின்றன. திரையற்ற கடல்போன்று மனதின் வேகம் ஒடுங்கிப் போகிறது. ஆனந்தம் ஆத்மாவின் நிஜசொருபம். மனதற்றவிடத்து ஆனந்தமே எஞ்சியிருக்கிறது. கனவற்ற உறக்கமே அதற்குச் சான்று ஆகிறது. ஆனந்தம் பிரம்மம் என்பது ஓர் ஆப்த வாக்கியம். விகல்பமற்ற பேரானந்தத்தில் திளைத்திருப்பவன் தன்னுடைய வீடு பேறு ஆகிய பிரம்ம சொருபத்தில் ஒன்றுபட்டிருக்கிருன். அறியாமையினல் ஜீவாத்மன் தனக்கு ஒரு வியக்தியை உண்டுபண்ணிக் கொண்டு விடாப்பிடியாக அதைப் பிடித்துக் கொண்டிருக்கிருன். அத்தகைய தான் என்பதற்கு அந்தம் அல்லது முடிவு வந்தால் அது சகஜ நிஷ்டையாக மாறிப் பிறகு நிர்விகல்ப சமாதியாகப் பூர்த்தியாகிறது. அத்தகைய பெருநிலையை இறைவா, எனக்குத் தந்தருள்வாயாக என்பது இக்கண்ணியின் கருத்து.

**328.** அல்லலெல்லாந் தீரவெனக்
கானந்த மாகவொரு
சொல்லை என்பால் வைத்ததையென்
சொல்வேன் பராபரமே.

மனிதனுடைய நிஜசொருபத்தை அவனுக்கு ஞாபக மூட்டுவதற்கு நிகரான மானுட சேவை வேறு இல்லை. அஞ்ஞானத்தால் மனிதன் தன்னுடைய நிஜசொருபத்தை மறந்து பிரகிருதியின் செயல்களைத் தன்னுடையவைகளாக எடுத்துக் கொண்டு அல்லல் பட்டுக்கொண்டிருக்கிருன். பாத்திரம் ஒன்றில் நீர் ஊற்றிவைக்கப்பட்டிருக்கிறது. அப்பாத்திரத்தை அடுப்பில் ஏற்றித் தீ எரிந்து கொண்டிருக்கிறது. நீர் தளதளவென்று கொதிக்கிறது. அப்பொழுது பாத்திரத்தின் அடிப்பாகம் நம்முடைய காட்சியில் இல்லை. ஆத்ம சொருபம் என்னும் பாத்திரத்தில் அந்தக்கரணம் என்னும் ஜலம் கொட்டிவைக்கப்பட்டிருக்கிறது. ஆசை என்னும் கனல் சதா எரிந்து கொண்டிருக்கிறது. அதனுல் மனக்கொதிப்பு மிக உண்டாயிருக்கிறது. மயக்கத்தால் அந்தக் கொதிப்பைத் தன்னுடையது என்று ஆத்மா ஏற்றுக்கொள்ளுகிறது. பிரபஞ்ச இன்பதுன்பங்களுக்கு அப்பாலுள்ள ஆத்மாதன்னைப் பிரபஞ்ச மயமாகக் கருதி அல்லல்பட்டுக் கொண்டிருக்கிறது. மகா வாக்கியங்களுள் நீ நாடுகிற பரவஸ்து சொருபமாக நீ இருக்கிருய்—தத்-துவம் அஸி என்பது ஒன்று. நீ ஆத்மா, பிரகிருதி அல்லை என்பது அதன் உட்கருத்து. தன்னைப் பிரகிருதி மயமாகக் கருதிக்கொள்ளுபவன் படாத பாடுபடுகிருன். பிரகிருதியின் செயல்கள் தன்னைத் தீண்டமாட்டா. தான் நிஷ்கிரியன், கர்மாதீதன், குணதீதன் என்று தன்னைப் பற்றிய உண்மையை அறிந்து கொள்ளுகிறவன் அக்கணமே பிரபஞ்சத்துக்கு அப்பாலுள்ள பேரானந்த சொருபியாகிருன். நிகழ்ச்சி ஒன்று இதற்கு நல்ல சான்று ஆகிறது. கனவில் ஒருவன் நரி ஆனுன். வேட்டை ஆட்களும், வேட்டை நாய்களும் நரியைத் துரத்தி வந்தார்கள். கனவேகமாக நரி ஓடிற்று. அதே வேகத்தில் ஓடிய நாய் ஒன்று நரியின் பின்னங்காலைக் கௌவியது. நரி ஓர் உதறு உதறியது. இப்படிக் கனவு கண்டவன் காலைத் தரையில் படீல் என்று அடித்தான். வலியால் எழுந்து உட்கார்ந்து கொண்டு உளறினுன். நாய் என்னை ஏன் பிடிக்க வருகிறது என்று கூடியவர்களிடம் கேட்டான். நீ ஏன் நரியானுய் என்று அவர்கள் கேட்டார்கள். தான் நரியாகவில்லை என்னும் தெளிவு உடனே அவனுக்கு உண்டாயிற்று. பிறகு அமைதியுற்றிருந்தான். மகா வாக்கியம் மனிதனை இந்த நிலைக்குக் கொண்டு வருகிறது என்பது இக்கண்ணியின் கருத்து.

# பரபோதம்

( ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரமானந்தரின் போதனை )

கடவுள் கற்பகதருவாக இருக்கின்றார். மனிதன் கடவுளிடம் எதைக் கேட்கின்றானோ அதை அவன் அவரிடமிருந்து பெறுகின்றான். ஆனால் மாயைக்கு வசப்பட்டிருக்கும் மனிதன் கடவுளிடமிருந்து பேரின்பத்தைப் பெற விரும்புவதில்லை. பேரின்பத்துக்குப் பதில் உலக இன்பங்களைப் பெற்றுத் தான் மகிழ்ச்சியோடு இருப்பதாக எண்ணிக் கொள்கின்றான். பன்றி சேற்றில் வாழ்ந்து இருப்பதைச் சுகம் என்று எண்ணுவது போன்று உலக பந்தபாசத்துக்குள் அழுந்திக்கிடப்பதைச் சுகம் என்று எண்ணிக் கொண்டிருப்பவர்கள் உலகாயதர்கள் ஆகின்றார்கள். உலக வாழ்வு நிலையான சுகத்தைத் தருவதில்லை. துன்பத்துக்கு மேல் துன்பம் உலக வாழ்விலிருந்து வருகின்றது. துன்பம் வருங்காலத்துத் தான் வாழ்ந்த வாழ்வைப் பற்றி உலகாயதன் எண்ணிப் பார்க்கின்றான். அங்ஙனம் எண்ணிப் பார்க்கின்ற பொழுது தான் அதுவரையிலும் வாழ்ந்த வாழ்க்கை வீணாகப் போய்விட்டதை அறிகின்றான். வாழ்வை வீணாக்குவது யாருக்கும் எளிது. வாழ்வைப் பயன்படுத்துவது யாரோ ஒரு சிலருக்குத்தான் சாத்தியமாகிறது. வாழ்வைப் பயன்படுத்துகின்றவர்கள் தாங்கள் ஓர் கற்பகதருவின் கீழ் அமர்ந்திருப்பதை அறிகின்றார்கள். வாழ்க்கையைத் தெய்வீக மயமாக்க வேண்டுமென்று அக்கற்பகதருவின் கீழிருந்து எண்ணுகின்றார்கள். அவ்வெண்ணம் அவர்களுக்கு நிறைவேறுகின்றது. கற்பக தருவின் கீழ் இருப்பதை அறியாதவர்கள் விலங்கு போன்று வாழ்கின்றார்கள்.

மாயை இருவகைப்படும். வித்யாமாயை, அவித்யாமாயை என்று அவை பெயர் பெறுகின்றன. வித்யா மாயை மனிதனைக் கடவுள் இடத்து எடுத்துச் செல்லுகின்றது. அவித்யா மாயை மனிதனைக் கடவுளிடமிருந்து பிரித்து வைக்கின்றது. விவேகத்தையும் வைராக்கியத்தையும் வளர்ப்பது வித்யா மாயையாகும். வித்யா மாயையிடத்து நீ சரன்புகுதல் வேண்டும். வித்யா மாயையிடத்துச் சரன்புகுவது கடவுளிடம் சரன்புகுவதற்கு நிகர் ஆகிறது. அவித்யா மாயை காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் ஆகிய சிற்றியியல்புகளை வளர்க்கிறது. அவித்யா மாயைக்கு இடம் தருகின்ற மனிதன் விலங்குத் தன்மை உடையவன் ஆகின்றான். நீ விவேகத்தையும், வைராக்கியத்தையும் உன்னிடம் வளர்ப்பாயானால் உன்னிடமுள்ள அவித்தை அழிக்கப்படுவது ஆகிறது. அவித்தைக்கு நீ இடம் தருவாயானால் கடவுளுக்கு நீ புறம்பானவன் ஆகின்றாய். அவித்தைக்கு இடம் தருகின்ற அளவு நீ துன்பத்தைப் பெருக்குகின்றவன் ஆகின்றாய். வித்யா மாயை அவித்யா மாயை இரண்டும் உலகில் இருக்கின்றன. வித்யா மாயையை வளர்க்கின்றவன் ஞானம், பக்தி, வைராக்கியத்தைப் பெறுகின்றான். அவித்யா மாயையை வளர்க்கின்றவன் கீழ்மைக்கு ஆளாகித்துன்பத்தைப் பெறுகின்றான். நீ அவித்யா மாயையை வளர்ப்பதால் துன்பப்படுகின்றாய். நீயே துன்பத்தை உண்டாக்கிக்கொண்டு கடவுள் துன்பத்தைத் தருகின்றார் என்று ஏன் கூறுகிறாய்? க்ஷண நேரம் இன்பத்தைத் தருகின்ற விஷயங்களில் நீ விழுகின்றாய். க்ஷணநேர இன்பத்தைத் தொடர்ந்து துன்பம் வருவதைப் பற்றி நீ விசாரித்துப் பார்ப்பதில்லை. நெருப்பில் கையை வைத்தால் கை காந்திப் போகும். நீ நெருப்பில் கையை வைத்துவிட்டுக் கை காந்திப்போய்விட்டதே என்று வருந்துகின்றாய். நெருப்பு கையைச் சுட்டுவிட்டது என்றும் குறை கூறுகின்றாய். நெருப்பின் இயல்பு சுடுவதாகும். சுடுகின்ற தன்மை உடைய நெருப்பில் கை வைத்தது உன் குற்றமாகும்.

"தீபம் வெளிச்சத்தைத் தருகின்றது. அவ்வெளிச்சத்தின் உதவியால் சிலர் பாகவதம் போன்ற பக்தி நூல்களைப் படிக்கின்றார்கள். இன்னும் சிலர் அவ்வெளிச்சத்தின் துணையைக் கொண்டு பொய்ப்பத்திரம் தயாரிக்கின்றார்கள். பொய்ப்பத்திரம் தயாரிக்கின்றவர்களுடைய குற்றம் விளக்கினுடைய குற்றம் ஆகாது." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். மேலும் அவர் பகர்ந்திருப்பதாவது:

"மலையமாருதம் என்னும் தென்றல் வீசு

கிறது. அது பக்குவப்பட்ட மரங்களின் மீது மோதுகின்றபோது அம்மரங்கள் சந்தன மரங்களாக மாறுகின்றன. ஒன்றுக்கும் உதவாத மரங்களின் மீது அத்தென்றல் பட்டாலும் அவைகள் இடத்து ஒரு மாறுதலும் உண்டாவதில்லே.'' மக்களுக்கிடையிலும் இரண்டுதரப்பட்ட மனிதர்கள் இருக்கிறார்கள். சிலர் சான்றோர்களுடைய சன்னிதானத்துக்குவந்து அவர்களுடைய ஆப்தவாக்கியங்களைக் கேட்டவுடன் மேலாம் வாழ்வுக்கு விழிப்புடையவர்கள் ஆகின்றார்கள். அவர்கள் தலைத்தரமானவர்கள் ஆகிறார்கள். அவர்கள் ஈசுவர தரிசனம் பெற வேண்டும் என்ற ஆவல் உடையவர்களாக மாறுகின்றார்கள். பிறப்பு இறப்பு என்னும் துன்பத்திலிருந்து விடுபட வேண்டும் என்னும் ஆவல் உடையவர்களாக மாறுகின்றார்கள். அப்படி அவர்கள் உள்ளத்தில் எழுகின்ற ஆவல் அவர்களைத் தீவிரமாகச் சாதனை புரியும்படி தூண்டுகிறது. அத்தகையவர்கள் அருள் ஒளி பெறுவது திண்ணம்.

மற்றொரு வகை மனிதர்கள் இருக்கின்றார்கள். அவர்களுக்கு நீ எவ்வளவுதான் ஆத்மீக விஷயங்களை எடுத்துச் சொன்னாலும் அவர்கள் அவற்றை ஏற்றுக்கொள்வதில்லை. அவர்கள் இவ்வுலகில் சாசுவதமாக வாழ்ந்திருக்கலாம் என்று கற்பனை பண்ணுகின்றார்கள். அவர்கள் இல்லாவிட்டால் உலகம் இருக்காது என்றும் எண்ணுகிறார்கள். உலக சுகத்தை எவ்வளவு அனுபவிக்க முடியுமோ அவ்வளவையும் அனுபவித்து விடவேண்டுமென்று எண்ணுகின்றனர். நமக்குத் தெரியாத கடவுள் இன்பத்துக்காக உலக சுகத்தைத் துறப்பது முட்டாள்தனமென்று எண்ணுகின்றனர். இப்படிக் கற்பனைபண்ணுகின்ற அவர்கள் அறியாமை என்னும் இருள் உலகிலேயே இருந்துவிடுகிறார்கள்.

உடலுக்கு உணவு எவ்வளவு இன்றியமையாததோ பிரார்த்தனை உள்ளத்துக்கு அவ்வளவு இன்றியமையாதது. பிரார்த்தனை இன்றி ஒரு நாளையும் கழிக்காதே. உணர்ச்சியோடு, முழு மனதோடு உருகி இங்ஙனம் பிரார்த்தனை செய். ''இறைவா, எனக்கு ஞானத்தைக் கொடு. ஆணவ அகங்காரத்திலிருந்து என்னை விடுதலை செய். உன்னிடத்தில் சரணாகதி அடையும்படி எனக்குப் புகட்டு. என்னை உனக்குரியவன் ஆக்கிவிடு.''

கடவுளைப் பெறவேண்டும் என்னும் தீவிர ஆவல் கொண்டிரு. பெரியோர்களினுடைய துணையைக்கொள். அருளாளர்களுடைய அருள் வட்டத்திலிருந்து சாதனை செய். பேரானந்தத்தைப் பெறுவதிலின்றும் தவறி விடாதே. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய அருள் வட்டத்துக்குள் வந்துள்ள நீ உண்மையாக அருள் தாகம் கொண்டிருப்பாயானால்ஸ்ரீராமகிருஷ்ணருடைய அருளைப் பெறுவது திண்ணம். கடவுளுடைய அருள் காற்று ஓயாது வீசிக்கொண்டு இருக்கின்றது. பக்தி விசுவாசம் என்னும் துணியை விரித்துக்கட்டு. அப்பொழுது அந்த அருள் காற்று உன்னை லக்ஷியத்திடம் எடுத்துச்செல்லும்.முன்னேக்கிப்போய்க்கொண்டே இரு. திரும்பிப் பார்க்காதே. கடவுள் தரிசனம் பெற்று நீ பாக்கியவான் ஆவாயாக. உன் வாழ்வு கடவுள் தரிசனம் பெற்றுப் பெரு வாழ்வாக ஆகட்டும். பேரின்பப் பெருவாழ்வு உனக்குரியது. சிற்றின்பம் என்னும் சிறு வாழ்வைத் தியாகம் செய்து பேரின்பம் என்னும் பெருவாழ்வைப் பெறுவாயாக.

கடவுள் தரிசனம் பெறுவதற்காக ஸ்ரீ ராமகிருஷ்ணர் அல்லும் பகலும் ஆறுமாதகாலம் அதே சிந்தனையில் மூழ்கி இருந்தார். மாலைப் பொழுதில் ஆலயத்திலிருந்து வரும் மணியோசையைக் கேட்டவுடன் வாழ்க்கையில் மேலும் ஒரு நாள் கழிந்துவிட்டதே, இன்னும் தாயின் தரிசனம் கிடைக்கவில்லையே என்று புலம்புவார். தேம்பித் தேம்பி அழுவார். ராம்பிரசாதருக்குக் காட்சி கொடுத்த அன்னாய் உன் காட்சியை எனக்குத் தரலாகாதா?என்று கூறி ஏங்குவார். அத்தகைய தீவிரம் வந்தாலொழிய கடவுள் காட்சியைப் பெறமுடியாது. மானுட வாழ்வின் லட்சியம் கடவுள் தரிசனம் பெறுவதாகும். கடவுள் தரிசனத்துக்காகப் பாடுபடுகின்ற அருளாளர்களே மானுட வாழ்வை நன்கு பயன்படுத்துகின்றவர்களாகிறார்கள்.நீ மானுடனாகப் பிறந்துள்ளாய். நீ கடவுள் தரிசனம் பெற்றாகவேண்டும்.உன்வாழ்வை அதற்கு அர்ப்பணிப்பாயாக. உள்ளமும் உடலும் உறுதியாக இருக்கும் இளமையிலேயே தீவிரமாகச் சாதனையில் ஈடுபடு.

---

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-109

650. दृश्यरहिता த்ருச்யரஹிதா—காட்சியில் இருப்பவைகளுக்கு அப்பாற்பட்டவள் என்பது இதன் பொருள்.

புறக்கரணங்களாகிய பஞ்சேந்திரியங்களுக்கும் அந்தக்கரணங்களாகிய மனம், புத்திக்கும் இலக்கு ஆகின்ற யாவும் பிரபஞ்ச மயமானவைகளாம். அவையாவும் நிரந்தரமான காட்சிக்கு இலக்கு ஆகமாட்டா. பாகிய கரணங்களும் அந்தக்கரணங்களும் முறையாகச் செயல்புரிகின்றபொழுது பிரபஞ்சம் நுகரப்படுகிறது. அயர்ந்த உறக்கத்தில் பாகிய கரணங்களும் அந்தக்கரணங்களும் செயலற்று அடங்கிக் கிடக்கின்றன. அப்பொழுது ஜகத்தும் காட்சியில் இல்லை. எது ஒரு காரணத்தை முன்னிட்டுக் காட்சியில் இருக்கிறதோ, மற்றொரு காரணத்தை முன்னிட்டுக் காட்சிக்கு எட்டுவதில்லையோ அது வியாவகாரிகஸத் எனப்படுகிறது. அதாவது ஒருசூழ்நிலையை முன்னிட்டுக் காட்சியில் இருப்பதாம். சூழ்நிலை மாறியமைகிறபொழுது காட்சியும் மாறுகிறது அல்லது மறைந்துபோகிறது. ஜீவர்களாகிய உயிர்வகைகளும் அவைகளுக்கு இருப்பிடமாகிய ஜகத்தும் வியாவகாரிகஸத் ஆகின்றன. அவை யாவும் தோன்றவும், ஒடுங்கவும் செய்கின்றன. வியாவகாரிகஸத் திரிபுடி மயமாய் இருக்கிறது. காண்போன், காணுதல், காணப்படுபொருள் ஆகிய மூன்று கூறுகள் அமைந்திருக்குமிடத்து அவைகள் திரிபுடி எனப்படுகின்றன. இம்மூன்றனுள் காணுதலும், காணப்படுபொருளும் வியாவகாரிக ஸத் ஆகின்றன. இவைகளைக் காணுகிற ஆத்ம சொருபம் யாண்டும் தன்மயமாய் இருக்கிறது. அந்த ஆத்மசொருபத்தில் காணுதல் என்னும் செயலும் காணப்படு பொருளும் ஒடுங்குகின்றன. அயர்ந்த உறக்கமே அதற்குப் பிரமாணம் ஆகிறது. ஆனால் காண்போனாகிய ஆத்மா எப்பொழுதுமே காட்சிக்கு இலக்கு ஆவது இல்லை எனினும் யாண்டும் நித்தியமாய் நிர்விகாரியாய் ஆத்ம சொருபம் இருக்கிறது. இக்கோட்பாட்டை வேறு ஒரு பாங்கில் பகருமிடத்து த்ருக், த்ருஸ்ய ஆராய்ச்சியில் அது நம்மைக் கொண்டு சேர்க்கிறது. த்ருக் எனப்படுவது காணும் வல்லமை படைத்துள்ள ஆத்ம சொருபம். த்ருச்யம் என்பது த்ருக்கினுடைய த்ருஷ்டிக்கு இலக்காய் இருக்கின்ற பிரபஞ்சம். திருஷ்டி என்கின்ற செயலும், த்ருஸ்யம் என்னும் காணப்படுபொருளும், த்ருக்கில் உதித்து, த்ருக்கில் நிலைபெற்றிருந்து, பிறகு த்ருக்கில் ஒடுங்குகின்றன. ஆகையால் த்ருஸ்யமாயிருப்பது வியாவகாரிகஸத். த்ருக்கோ யாண்டும் தன்மயமாய் இருப்பதால் அது பாரமார்த்திக ஸத் எனப்படுகிறது. அதாவது கால தேச நிமித்தத்துக்கு அப்பாற்பட்டது. பரதேவதையாகிய அன்னை யாண்டும் பாரமார்த்திக ஸத்தாக இலங்குகின்றாள். அவளைப் பார்ப்பதற்கு வேறு ஒரு வஸ்து இல்லை. அவளைப் பார்ப்பதற்கு ஜீவர்கள் படைத்துள்ள பாஹிய கரணங்களும், அந்தக்கரணங்களும் பயன்படமாட்டா. யாண்டும் அவள் தன்னில் தானாய் தன்மயமாய் இருக்கிறாள். ஆதலால் பாரமார்த்திக ஸத் ஆகிய அவள் யாண்டும் த்ருஸ்ய ரஹிதாவாக இலங்குகின்றாள்.

651. विज्ञात्री விக்ஞாத்ரீ—பேரறிவோடு கூடியவள் என்பது இதன் பொருள்.

இந்த நாமத்தில் அடங்கியுள்ள கோட்பாட்டை ஓர் உபமானத்தின் மூலம் அறிந்து கொள்ள முயலுவோம். கோடையிலே தென்படுகின்ற சூரியப் பிரகாசம் நம்முடைய காட்சிக்கு முற்றிலும் இலக்காவதில்லை. அதைப் பார்க்க முயன்றால் கண் கூசுகிறது. நம்முடைய காட்சிக்கு அதனுடைய பிரகாசத்தின் ஒருசிறு பகுதிதான் இலக்கு ஆகிறது. சூரியனுடைய பூரணப் பிரகாசத்தை யாருமே ஊனக் கண்கொண்டு காணமாட்டார்கள். ஏனென்றால் அதை முழுதும் பார்க்கிற திறமை ஊனக்கண்ணுக்கு இல்லை. ஆனால் அந்த சூரியன் தன்னுடைய பிரகாசத்தைத் தானே விளக்கிக் கொண்டிருப்பவனாகிறான். தீப வெளிச்சத்தில் சூரியனைக் காட்டித் தரவேண்டிய அவசியமில்லை. அளப்பரிய அதனுடைய பிரகாசம் தன்னைத்தானே விளக்கிக்கொண்டிருக்கிறது. பிரகாசத்தோடும், பிரகாசம் இல்லாமலும் இருக்கிற ஏனைய பொருள்களை சூரியப்பிரகாசம் விளக்கிக்காட்டுகிறது. அம்பி

கையின் பேரறிவுப் பிரகாசம் அத்தகையது. அனைத்தையும் அவள் விளக்குகிறாள். ஆனால் அவளை முழுதும் அறிந்துகொள்ள யாருக்குமே இயலாது. ஆதலால் அவள் விச்ஞாத்ரீ என்னும் நாமம் பூண்டுள்ளாள்.

652. वेद्यवर्जिता வேத்யவர்ஜிதா— அவளுடைய பேரறிவுக்கு எட்டாதது ஒன்றுமில்லை என்பது இதன் பொருள்.

சர்வக்ஞையாக அதாவது அனைத்தையும் அறிந்தவளாக அம்பிகை இருக்கிறாள். மேற்கொண்டு அறிந்துகொள்ளுதற்கு அவளுடைய அறிவுக்கு எட்டாதது ஏதுமில்லை. அம்பிகையின் வாலறிவில் சேதனம், அசேதனம் ஆகிய யாவும் அடங்கியிருக்கின்றன. வியாவகாரிக ஸத், பாரமார்த்திக ஸத் ஆகிய இரண்டு நிலைகளையும் அவள் பூரணமாக அறிகிறாள். ஞானக் களஞ்சியமாக இருப்பவள் அவள். அவளுடைய பேரறிவு அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. மேற்கொண்டு அவளால் அறிந்துகொள்ளுதற்கு ஏதுமில்லாததால் அவள் வேத்யவர்ஜிதா எனப்போற்றப்பெறுகிறாள். அடுத்தபடியாக அம்பிகையை த்ருஸ்யமாக வைத்து அவளைத் தரிசித்து ஆனந்தமடைவதற்கு வேறு வியக்திஅல்லது மூர்த்தியாராவது இருக்கிறார்களா? என்று ஆராய்ந்து பார்த்தால்அப்படிஅவளுடைய சொருபத்தைப் பார்த்துப் பூரித்து இருப்பதற்கு அவளுக்குப் புறம்பாக யாருமே இல்லை. ஜீவகோடிகளனைத்தும் அவளுடைய சொருபத்தில் அடங்கிக்கிடக்கின்றன. அவளை விட்டுப் பிரித்தெடுத்து அவளைப் பார்த்துப் பரமானந்தம் அடைவதற்குத் தேடிப்பார்த்தாலும் யாரும் அவளுக்கு அன்னியமாக இல்லை. அவளே யாவுமாக இருக்கிறாள். அவள் கொடுத்திருக்கிற சிற்றறிவைக் கொண்டு அவளைப் பண்பாடடைந்துள்ள ஜீவாத்மாக்கள் ஏதோ சிறிதளவுதான்அறிந்து கொள்ள வல்லவர்களாகிறார்கள். இதற்கு நல்ல சான்றாக ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இலங்குகின்றார். யோக சாஸ்திர நூல்களையோ மற்ற நூல்களையோ கற்க அவர் மறுத்துவிட்டார். பிறர் யாரிடமிருந்தும் சாதன வகைகளைக் கற்றுக்கொள்ளவும் அவர்மறுத்து விட்டார். அம்பிகை தானே கிருபை கூர்ந்து சாதனவகைகள் யாவையும் தமக்குப் புகட்டியருள வேண்டுமென்று அம்பிகையிடமிருந்து உள்ளன்போடும், ஊக்கத்தோடும் அவர் பிரார்த்தனை பண்ணினார். அதற்கேற்ப யோகாரூடர் அல்லது யோகசித்தர் ஆனார். ஆதலால் அவள் வேத்யவர்ஜிதா எனப் போற்றப்பெறுகிறாள்.

653. योगिनी யோகினீ—யோகவடிவினளாக இருப்பவள் என்பது இதன் பொருள்.

மனிதனுடைய பண்பாடு ஆறு சாஸ்திரங்கள் மூலமாக மேல் நிலைக்கு வருகிறது. அந்த ஆறு சாஸ்திரங்களாவன: நியாயம், வைசேஷிகம், பூர்வமீமாம்ஸம், சாங்க்யம்,யோகம்,வேதாந்தம் என்பனவாம். வைசேஷிகசாஸ்திரத்தின் மூலமாக ஒழுங்காக எண்ணுதற்கு மனிதன் கற்றுக் கொள்ளுகிறான். நியாய சாஸ்திரத்தின் வாயிலாகத் தான் அறிந்து இருப்பதை அறிந்தபடி பிறர்க்கெடுத்துச் சொல்ல மனிதன் தகுதியுடையவன் ஆகிறான். பூர்வ மீமாம்சத்தின் வாயிலாகத் தீவிரமாகக் கர்மத்தில் ஈடுபட்டு சாதிக்க வேண்டியவைகளை மனிதன் சுய முயற்சியால் சாதிக்கிறான். சாங்க்ய சாஸ்திரத்தின் வாயிலாகப் பிரபஞ்சத்தின் அமைப்பையும் அதில் உயிர் வகைகள் இடம் பெற்றிருப்பதையும் மனிதன் அறிந்துகொள்ளுகிறான். யோகசாஸ்திரம் ஐந்தாவது இடம்பெறுகிறது. இந்த யோக சாஸ்திர சொருபிணியாக அம்பிகை இலங்குகின்றாள். சாதாரண மனிதனை மேலான மனிதனாக மாற்றியமைக்க வல்லது யோகசாதனம். யோகசாதனங்கள் புரிவது மானுட ஜன்மத்தின் குறிக்கோள். யோக சாதனத்தின் ஆரம்ப தசையிலிருக்கின்ற மனிதனும் யோகி என்று அழைக்கப்படுகின்றான். யோக சாதனங்கள் புரிந்து பூரண நிலையை எட்டுகிற மனிதனும் யோகி என்று அழைக்கப் படுகிறான். பிரபஞ்சத்திலுள்ள வடிவங்களனைத்தையும் அம்பிகை எடுத்துள்ளாள். அந்த வடிவங்களுள் யோகினியாக இருந்துகொண்டு யோகம் பயிலுகிறவர்களுக்கு முன்மாதிரியாக இருக்கிறாள். எந்தக் கலையில் ஆனாலும் சரி அதில் மேல் நோக்கிப் போக முயலுகிறவர்களுக்கு முன்மாதிரியாயிருக்கிற மூர்த்தி அவசியம். யோக சாஸ்திரம் எட்டு அங்கங்களை உடையது. ஆதலால் அது அஷ்டாங்கயோகம் என இயம்பப்படுகிறது. எட்டு அங்கங்களும்

மனிதன் அடைய வேண்டிய மேல் நிலைகளுக்கு விளக்கங்களாக அமைந்திருக்கின்றன. அந்த நிலைகள் அனைத்தையும் அம்பிகையின் சொரூபத்தில் காணலாம். ஆதலால் யோக சாதனங்கள் புரிகிறவர்கள் யோகினியாக உள்ள அம்பிகையை முன்மாதிரியாகக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஒவ்வொரு சாதனத்தையும், பழக்கத்தில் கொண்டு வருகிறவன் அந்தந்த சாதனத்தின் நிறைநிலையில் அம்பிகை இருக்கிறாள் என்பதை எண்ணிப் பார்த்து அவளுக்கு வந்தனை வழிபாடு செய்கிறபொழுது சாதனம் மனிதனுக்கு சுலபத்தில் பிடிபடுகிறது.

யோகம் என்னும் சொல் நாடிய லட்சியத்தை எளிதில் அடையப் பெறுவது எனப் பொருள் படுகிறது. மானுடன் ஒருவனுக்கு அதிவிரைவில் வேண்டியவாறு செல்வம் வாய்க்கப் பெறுகிறபொழுது 'அவனுக்கு அடிக்கிறது யோகம்' என உலகத்தவர் இயம்புவார்கள். வாழ்க்கையின் குறிக்கோளாகப் புருஷார்த்தங்கள் நான்கு இருக்கின்றன. அவைகளை முறையே தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று இயம்புகிறோம். அதே புருஷார்த்தங்களை அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்கள் என்று தமிழில் சொல்லுகிறோம். மானுடன் ஒருவனுக்கு தர்மம் சரியாக வாய்க்குமானால் அது அவன் அடைகிற யோகமாகிறது. அர்த்தம் அல்லது பொருள் திட்டப்படி கிட்டுமானால் அது யோகம் என இயம்பப்படுகிறது. பல படித்தரங்களில் இருக்கிற காமம் அல்லது இன்பம் இனிது வாய்க்கப் பெறுவதும் யோகமாகும். இறுதியாக ஜீவாத்மனைப் பரமாத்மனோடு எது இணைத்து வைக்கிறதோ அதுயோகமாகிறது. சேர்த்து வைத்தல் அல்லது இணைத்து வைத்தல் என யோகம் என்னும் சொல் பொருள் படுகிறது. சிறப்பாக ஜீவாத்ம பரமாத்ம இணக்கமே யோகம் என்று சொல்லப்படுகிறது. அத்தகைய பரமாத்ம தத்துவத்தை உள்ளபடி விளக்குவது ஆறுவது சாஸ்திரமாகிய வேதாந்தம். அம்பிகை தானே யோகினீயாக இருந்து தன்னை வழிபடுகின்றவர்களை யோக சாதனத்தில் உருவாக்குவதால் அந்தச் சாதகர்கள் பரதேவதையாகிய அவளைச் சென்றடைவது உறுதி என்னும் கோட்பாடும் யோகினீ என்னும் சொல்லில் அடங்கியிருக்கிறது. ஆதலால் யோக சாதனங்கள் பயிலுகிறவர்களுக்கு அம்பிகை தானே யோகினீயாக இருப்பது நல்ல வாய்ப்பாகிறது. இக்கோட்பாடு இந்த நாமத்தில் அடங்கியிருக்கிறது.

654. योगदा யோகதா — யோகத்தை வழங்குபவள் என்பது இதன் பொருள்.

மக்களுள் சிலர் செல்வம் படைத்தவர்களைப் பார்த்து வியப்படைகின்றனர். ஆனால் தாங்களே செல்வத்தைப் பெறுவதற்கான முயற்சி எடுத்துக்கொள்வதில்லை. முயன்று செல்வத்தைப் பெறுவது ஒருவனுக்குச் சாத்தியம் என்றால் முயலுகிற எல்லார்க்கும் அது சாத்தியம் என்பது சொல்லாமலே விளங்குகிறது. யோக சாதனமும் அத்தகையது. யோக சாதனங்களில் மேலாம் நிலைகளை எட்டி இருப்பவர்களைப் பார்த்து மற்றவர்கள் பாராட்டுகிறார்கள். ஆனால் தாங்களே யோக சாதனங்களில் முயற்சி எடுத்துக்கொள்வதில்லை. செல்வத்தைச் சிறிது சிறிதாகச் சேகரிக்கின்றவனுக்குச் செல்வம் கைகூடுகிறது. அதே விதத்தில் யோக சாதனங்களைச் சிறிது சிறிதாகச் செய்து பழகுகிறவனுக்கு யோக சித்தி நாளடைவில் கை கூடுகிறது. பயின்றுகொண்டு வருகிற ஒவ்வொரு படித்தரத்திலும் யோக சாதனத்தைத் தனக்குத் தந்தருளவேண்டுமென்று அம்பிகையிடத்துப் பிரார்த்திப்பது முறை. சிலர் முயற்சி எடுத்துக்கொள்ளாது கோயிலுக்குச் சென்று செல்வம் தரவேண்டுமென்று பிரார்த்திப்பார்கள். அத்தகையவர்களுக்குத் தரித்திரம் வளருகிறது. யோக சாதனம் புரியாது அதைக் குறித்துப் பெரிதாகப் பேசுகிறவர்களுக்கு யோகம் வாய்க்காது. தான் எடுத்துக்கொள்ளுகிற முயற்சிக்கு உறுதியும் ஊக்கமும் தரவேண்டுமென்று அம்பிகையிடத்துப் பிரார்த்திக்கலாம். ஊக்கத்தோடு யோக சாதனம் செய்கிறவர்களுக்குக் கிருபை கூர்ந்து அம்பிகை யோகசாதனத்தை வழங்குகிறாள். அவனருளாலே அவன் தாள் வணங்கி என்பது இதில் அடங்கியிருக்கிறது. முறையாக முயன்று அம்பிகையிடம் பிரார்த்தனை பண்ணுகிறவர்களுக்கு யோக தத்துவங்களை அவள் எடுத்து வழங்குவதால் யோகதா என்னும் பெயர் பெற்றுள்ளாள்.

# என் குருநாதர்

( சுவாமி விவேகானந்தர் நியூயார்க் நகரில் நிகழ்த்திய சொற்பொழிவு

[ 294 ஆம் பக்கத் தொடர்ச்சி ]

எல்லா மதங்களும் ஒரே உண்மையைத்தான் புகட்டுகின்றன என்பதை அம்மதங்களை அனுஷ்டித்துப் பார்த்து என் குருநாதர் அறிந்தார். நான் என்பதை அகற்றி எல்லாம் நீ என்பதை அறிய வேண்டும் என்ற உண்மையைத்தான் எல்லா மதங்களும் வற்புறுத்துகின்றன என்பதை அறிந்து அகங்காரத்தை அழிக்கக் கற்றுக்கொண்டார். யார் ஒருவர் ''நான் அல்லன் எல்லாம் நீதான்'' என்கின்றாரோ அவருடைய இருதயத்தில் இறைவன் எழுந்தருளுகின்றார். ஜீவபோதத்திலிருந்து எழுகின்ற நான் என்னும் உணர்வு குறைகின்றவனிடத்தில் கடவுள் வாசம் செய்கின்றார். இவ்வுண்மை எல்லா மதங்களிலும் அடங்கியிருப்பதை அறிந்ததும் அவ்வுண்மையைத் தம் வாழ்வு மயமாக ஆக்குவதில் ஈடுபட்டார். ஓர் உண்மையைப்பற்றி அறிய வேண்டுமென்ற விருப்பம் அவருக்கு எழுந்தால் அவ்வுண்மையைப்பற்றிக் கொள்கை அளவில் நின்றுவிடாமல் அவ்வுண்மையை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர ஆரம்பித்து விடுவார். கொடையைப்பற்றியும், சமத்துவத்தைப்பற்றியும், மக்களுடைய உரிமையைப்பற்றியும் பலர் வெகு அழகாகப் பேசுவதைக் கேட்கிறோம். வெறும் பேச்சளவில் அவர்கள் நின்றுவிடுகிறார்கள். ஒவ்வொரு கொள்கையையும் செயலுக்குக் கொண்டுவந்த மகான் ஒருவரைக் காணும்பேறு நான் பெற்றிருந்தேன். அவர் எதைச் சரி என்று நினைத்தாரோ அதைச் செயலுக்குக் கொண்டு வரும் திறமையுடையவராக இருந்தார்.

என் குருநாதர் வாழ்ந்து வந்த ஆலயத்திற்கு அருகில் பறைச்சேரி இருந்தது. இந்தியா முழுவதிலும் லட்சக்கணக்கான பறையர்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவர்கள் மிகக் கீழானஜாதியர்களாகக் கருதப்படுகின்றார்கள். பிராமணன் ஒருவன் தன் வீட்டைவிட்டு வெளியே வரும்பொழுது பறையனுடைய முகத்தைப் பார்த்துவிட்டால் அவன் பாவி ஆகிவிடுகின்றான். அப் பாபத்தைப் போக்குவதற்கு அன்று முழுவதும் பட்டினி இருந்து சில மந்திரங்களை அவன் உச்சரிக்க வேண்டும். அப்படிச் செய்து அவன் தன்னைப் புனிதப்படுத்திக்கொள்ளவேண்டும். இந்துக்கள் வாழும் இன்னும் சில தெருக்களுக்குள் பறையன் ஒருவன் போக நேர்ந்தால் அவன் காக்கையின் இறகு ஒன்றைத் தலையில் சொருகிக்கொள்ள வேண்டும். அப்படி அவன் சொருகித் தன்னை பறையன் என்று மற்றவர்களுக்கு விளம்பரப் படுத்தவேண்டும். மேலும் அவன் ''இந்தத் தெருவின் வழியாகப் பறையன் வருகின்றான். உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்'' என்று உரக்கச்சொல்லவேண்டும். இந்தச் சப்தத்தைக் கேட்டதும் மக்கள் மாயமாய்ப் பறந்து ஓடிவிடுவார்கள். அவனைத் தீண்டும் சந்தர்ப்பம் ஏற்பட்டுவிட்டால் ஸ்நானம் செய்து உடைகளையெல்லாம் களைந்துவிட்டு வேறு உடைகளை அணிந்துகொள்ளவேண்டும். பறையனும் தான் மற்றவர்களைத் தீண்டினால் அவர்கள் பாவி ஆகிவிடுகிறார்கள் என்று எண்ணினான். தன்னை அப்படி அவர்கள் ஒதுக்கி வைத்திருப்பது சரிதான் என்று பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக எண்ணிவந்தான். இத்தகைய சமுதாயக் கட்டுப்பாடு இருந்த காலத்தில் என் குருநாதர் ஒரு பறையனுடைய வீட்டிற்குச் சென்று அவனுடைய வீட்டைச் சுத்தம் செய்வதற்கு அனுமதி கேட்டார். தெருக்களையும் வீடுகளின் புழைக்கடைகளையும் சுத்தம் செய்வது பறையனுடைய தொழிலாகும். எக்காரணத்தைக்கொண்டும் வீடுகளின் முன்புற வாயில்களில் அவன் நுழையக்கூடாது. வீடுகளின் பின்புறமாகச் சென்று புழைக்கடைகளைச் சுத்தம் செய்யவேண்டும். அவன் சுத்தம் செய்துவிட்டுப் போன பின்பு அவன் சென்ற இடங்களுக்கெல்லாம் கங்கைநீர் தெளித்துப் புனிதப்படுத்துவார்கள். பிறப்பினால் புண்ணியவானாகப் பிராமணனும், பிறப்பில் பாவியாகப் பறையனும் கருதப்பட்டார்கள். என் குருநாதர் பிறப்பில் பிராமணர் ஆவார். பிறப்பில் பறையனாக இருந்த ஒருவன் வீட்டிற்குச் சென்று அவன் வீட்டைச் சுத்தம் செய்வதற்கு அனுமதி வேண்டுமென்

ளூர். ஆனல் அப் பறையன் அனுமதிக்கவில்லை. ஏனென்ருல் தன்வீட்டைப் பிராமணன் ஒருவன் சுத்தம் செய்வானுனல் தான் பெரிய பாபத்துக்குள்ளாகி அழிந்துபோக நேரிடும் என்று எண்ணினன். அவன் அனுமதிக்காததால் நள்ளிரவில் எல்லாரும் உறங்கிக்கொண்டிருக்கும் பொழுது பறைச்சேரிக்குச் சென்று தம்முடைய நீண்டகூந்தலால் பறைச்சேரியைஎன்குருநாதர் சுத்தம் செய்தார். அப்படிச் சுத்தம் செய்யும் பொழுது, "தாயே, பறையனுடைய பணியாளனுக என்னை ஆக்கு. பறையனினும் கீழானவன் என்னும் உணர்வை எனக்குக்கொடு" என்று பிரார்த்திப்பார். "என்னுடைய அடியார்களை வழிபடுபவர்கள்என்னைச் சிறந்த வழிபாடுசெய்தவர்கள் ஆகிருர்கள். உயிர்கள் எல்லாம் என்னுடைய குழந்தைகள்.அவ் உயிர்களுக்குப் பணிவிடை பண்ணுவது பக்தர்களுக்குக் கிடைக்கும் பாக்கியம்" என்று இந்து சாஸ்திரங்கள் பகருகின்றன.

இவ்விதம் அவர் செய்த சாதனைகள் பல உண்டு. அவைகளையெல்லாம் எடுத்துச்சொல்லிக்கொண்டிருப்பதற்கு அவகாசம் இல்லை. அவருடைய வாழ்க்கையைச் சுருக்கமாக உங்களுக்குக் கூற விரும்புகிறேன். வாழ்க்கை முழுதும் அவர் கற்றுக்கொண்டே இருந்தார். ஆண்பாலர்களுக்குத் தாங்கள் ஆண்கள் என்ற உணர்வும், பெண்பாலர்களுக்குத் தாங்கள் பெண்கள் என்ற உணர்வும் மனதைவிட்டு அகற்றப்படவேண்டும்.ஆத்மாபால்உணர்வைக் கடந்தது. ஆத்மா ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல. ஆண் பெண் என்ற உணர்ச்சி சரீரத்தைப் பொறுத்தது ஆகும். ஆத்ம ஞானம் பெறுவதற்குச் சரீரத்தோடு சம்பந்தப்பட்ட பாலுணர்வை வெல்ல வேண்டும். என் குருநாதர்ஆடவராகப்பிறந்திருந்ததனுல்பெண் தன்மையை வளர்க்க முயன்ருர். தம்மைப் பெண்ணுகவே கருதினர். பெண்போன்று ஆடை அணிந்துகொண்டார். பெண் போன்று பேசினுர். ஆடவர்களுக்குரிய செயலை விட்டுவிட்டுப் பெண்பாலரின் மத்தியில் வாழ்ந்து வந்தார். நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் வசிக்கும் அந்தப்புரத்திற்குச் சென்று அவர்களோடு பல ஆண்டுகள் வசித்தார்.இத்தகைய சாதனையின் மூலம் ஆண் பெண் என்ற உணர்ச்சியை அறவே வென்ருர். அவருடைய வாழ்வில் அவர் கொண்டிருந்த நோக்கம் அற்புத நோக்கமாக மாறியமைந்தது.

மேனுட்டில் நீங்கள் பெண்களை இளமைக்காகவும், அழகுக்காகவும் போற்றுகின்றீர்கள். ஆனல் என் குருநாதர் பெண்களை வழிபட்ட முறை உங்கள் கருத்துக்கு முற்றிலும் வேறுபட்டது. அவருக்குப் பெண்பாலரின் முகங்களெல்லாம் பராசக்தியின் முகங்களாகக் காட்சியளித்தன. பெண்பாலரைப் பராசக்தியாகக் கருதி வழிபட்டார். சமுதாயம் புறக்கணித்த ஸ்திரீகளின் முன் வீழ்ந்து "அகிலாண்டநாயகியே, நீ இந்த மாது வடிவில் இப்பொழுது காட்சி அளிக்கின்ருய். இன்னெரு சமயம் அகிலாண்டநாயகியின் வடிவத்தில் நீஎனக்குக் காட்சிகொடுக்கின்ருய். உன்னுடைய எல்லா வடிவங்களுக்கும் நமஸ்காரம்! நமஸ்காரம்!!" என்று கண்ணீர்மல்க அவர் சொல்லியதை நான் பார்த்திருக்கிறேன். எத்தகைய புனிதமான வாழ்க்கை அது! சிற்றின்ப உணர்வு சிறிதேனும் இல்லாத வாழ்க்கையாக அவருடைய வாழ்க்கை இருந்தது. பெண்கள் யாவரையும் அன்போடும், புனித நோக்கோடும்பார்த்து அவர்களுடைய முகத்தில் அகிலாண்ட நாயகியைக் கண்டு அவர் அடைந்த ஆனந்தம்தான் என்னே! உலகையெல்லாம் இரட்சித்து வரும் பராசக்தி ஒவ்வொரு பெண்ணின் முகத்திலும் பிரகாசிப்பதை அவர் கண்டார். இத்தகைய வாழ்வுதான் நமக்குத்தேவை. பெண்களிடம் தெய்வீகத் தன்மையுள்ளது. அதை மறைத்து வைக்க முடியுமா? அதை ஒருநாளும் மறைத்து வைக்க முடியாது. தெய்வத் தன்மையை அவர்களிடத்துக் காணவேண்டும். தூய்மையுடையவர்களாக நாம் மாறுமிடத்து அவர்களிடத்துள்ள தெய்வத்தன்மை நமக்குவிளங்குகிறது. அந்தத் தெய்வத்தன்மையை அவர்கள் மறைத்து வைக்க முடியாது. ஆத்ம ஞானம் பெறுதற்குத் தூய்மை மிகவும் அவசியம். பெண்பாலர்களிடம் தெய்வத்தன்மையைக் காணும் பரிசுத்தம் இல்லாது ஆத்மஞானம் அடைய முடியாது.

என் குருநாதருடைய வாழ்வு சிறிதும் மாசில்லாத பரிசுத்த வாழ்வாக இருந்தது. நம்முடைய வாழ்க்கையில் ஏராளமான

போராட்டங்கள் இடம் பெறுகின்றன. இந்தப் போராட்டங்கள் எதுவும் அவருடைய வாழ்க்கையில் இல்லை. ஆத்ம ஞானம் என்னும் இரத்தினத்தை அவர் ஈட்டினர். அதற்காகத் தம் வாழ்வின் முக்கால் பகுதியைச் செலவழித்தார். தாம்பெற்ற ஞானத்தை மக்களுக்குத் தருவதற்கும் ஆயத்தமாக இருந்தார். ஞானத்தை மக்களுக்கு எடுத்து வழங்கும் செயலைத் துவங்கினர். அவருடைய போதனையும், உபதேசமும் தனி இயல்பு உடையவைகளாக இருந்தன. எங்கள் நாட்டில் ஆத்ம ஞான குரு மிகவும் போற்றுதற்குரியவர் ஆவார். அவரைக் கடவுளாகவே வைத்துப் பூஜிப்பார்கள். தாய் தந்தையர்களுக்குக் காட்டும் மரியாதையை விட அதிகமான மரியாதையை அவருக்குக் காட்டுவார்கள். தந்தையும், தாயும் பூதவுடலைத் தந்திருக்கிறார்கள். ஆனல் ஞான குருவோ நம் விடுதலைக்கு வழிகாட்டுகிறார். நாம் அவருக்கு ஆத்மீகவழிவந்த அருட்செல்வர்கள் ஆகின்றோம். ஆத்ம ஞானத்தில் மிக உயர்ந்த நிலைக்குச்சென்ற ஞான குருவுக்கு இந்துக்கள் யாவரும் மரியாதை செலுத்துவார்கள். அவரைச்சுற்றிப்பெரும் கூட்டம் இருக்கும். என் குருநாதர் அத்தகைய மகான்களுள் ஒருவர் ஆவார். தம்மை யார் வணங்குகின்றார்கள் யார் வணங்குவதில்லை என்பதைப் பற்றிய சிந்தனையே அவருக்கு இல்லை. தாம் ஒரு ஆச்சாரிய புருஷர் என்ற எண்ணம் சிறிதும் அவரிடத்தில் இல்லை. அகிலாண்ட நாயகி தம்மூலம் அனைத்தும் செய்து வருகிறாள் என்ற எண்ணம்தான் அவரிடம் இருந்தது. அவர் அடிக்கடி பகர்வதாவது: "என் வாயிலிருந்து நல்ல விஷயங்கள் வருமானல் அவை அம்பிகையினுடைய சொற்களாகும். அவற்றிற்கும் எனக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை." அம்பிகையே அனைத்தும் செய்து வருகிறாள் என்ற எண்ணம் மட்டும் அவருடைய உள்ளத்தில் நிலைத்து நின்றது. இறுதிக் காலம் வரையில் அவ்வெண்ணம் அவர் உள்ளத்தை விட்டு அகலவில்லை. அவர் யாரையும் குருவாகத் தேடிப் போகவில்லை. நம்மைப் பண்படுத்தவேண்டும். ஆத்ம ஞானம் பெறுவதற்கு நம்மைத்தகுதியுடையவர்களாகச்செய்யவேண்டும். தேவையானவைகள் எல்லாம் தாமாக வந்து சேரும். இது அவருடைய கொள்கை. "தாமரை மலர்ந்ததும் அதனிடத்துள்ளதேனைப் பருகுவதற்குத் தேனீக்கள் அவைகளாகவே வந்து சேருகின்றன. உன் உள்ளமெனும் தாமரை நன்ருக மலரட்டும். சிறப்புக்கள் எல்லாம் தாமாக வரும்." இங்ஙனம் அவர் கூறுவது வழக்கம். இந்தப் பாடத்தை நாமும் கற்றுக்கொள்ள வேண்டும். இந்தப் பாடத்தை என் குருநாதர்எனக்குப் பலதடவைபோதித்து இருக்கிறார். ஆனல் நான் அதை அடிக்கடி மறந்து விடுகின்றேன். எண்ணத்துக்கு எவ்வளவு பெரிய சக்தி உண்டென்பதை அறிந்தவர்கள் மிகச் சிலரே ஆவர். மகான் ஒருவர் குகைக்குள் இருந்து கொண்டு தம்மை உலகுக்குஇன்னார் என்பதைக் காட்டிக்கொள்ளாது மறைந்திருந்து உயர்ந்த எண்ணம் ஒன்றை எண்ணி இறந்துவிடுவாராகில் அந்த எண்ணம் குகையின் சுவர்களைத் துளைத்துக் கொண்டு வெட்டவெளியில் பரவி மனித வர்க்கம் முழுவதிலும் ஊடுருவிப் பாய்கின்றது. எண்ணத்தின் சக்தி அத்தகையது ஆகும். மற்றவர்களுக்கு உன் எண்ணங்களை எடுத்துரைப்பதில் அவசரப்பட வேண்டியதில்லை. பிறருக்கு வழங்குவதற்குகேற்ப முதலில் நீ ஏதாவது சம்பாதித்துக்கொள். உன்னிடத்தில் இருந்தால்தான் பிறருக்கு வழங்கமுடியும். உபதேசம் என்பது வெறும் வாய்ப்பேச்சு அன்று; வெறும் கொள்கைகளை எடுத்துரைப்பதன்று; நம்முடைய பெற்றியைப் பிறரிடத்துச் செலுத்துவதாகும். உனக்கொரு புஷ்பத்தை எடுத்துக் கொடுப்பது போன்று ஆத்ம ஞானத்தை உனக்கு எடுத்து வழங்க முடியும். இது முற்றிலும் உண்மை. இது இந்தியாவில் தொன்று தொட்டு பழக்கத்திலிருந்து வருகிறது. முதலில் உன்னைப் பண்புடையவனுக்கு. அதுவே நீ செய்ய வேண்டிய கடமைகளுள் உயர்ந்த கடமையாகும். மெய்ப்பொருளை நீ முதலில் அறிந்துகொள். அறிந்ததைப் பிறகு நீ பலருக்கு எடுத்துரைக்கலாம். பலர் உன்னை நாடி வருவார்கள். இதுதான் என் குருநாதருடைய கொள்கை. அவர் யாரையும் குறை கூறுவதில்லை. அவரோடு நான் பல வருஷங்கள் வாழ்ந்திருக்கிறேன். எப்பிரிவினரைப் பற்றியும் குறைகூறி அவர் ஒரு வார்த்தை பேசி

யதை நான் கேட்டதில்லை. எல்லா மதப்பிரிவினர்கள் இடத்தும் அவர் அன்பு உள்ளம் கொண்டு இருந்தார். எல்லா மதங்களுக்கு இடையிலும் அவர் ஒற்றுமையைக் கண்டார். ஞானியாகவோ, பக்தனாகவோ, யோகியாகவோ, பற்றற்றுக் கர்மம் புரிபவனாகவோ மனிதன் இருக்கலாம். ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு பாவனைக்கு முக்கியத்துவம் கொடுக்கலாம். நான்கும் சேர்ந்து ஒரு மனிதனிடத்தில் அமைந்திருக்கலாம். நான்கும் சேர்ந்து அமைவதுதான் மனித சமுதாயத்துக்கு நல்லது. அவர் யாரையும் குறைகூறாது எல்லாரிடத்திலும் நன்மையையே கண்டார்.

என் குருநாதரைப் பார்க்கவும் அவர் பேச்சைக் கேட்கவும் ஏராளமான மக்கள் அவரிடம் வந்தனர். அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் சக்தி வாய்ந்ததாகவும் ஞானத்தெளிவுடையதாகவும் இருந்தது. அவருடைய பாஷை விசேஷமுடையதாக இல்லை. அவருடைய சொல் ஆத்ம சக்தி நிறைந்ததாக இருந்தது. இவ்வுண்மையை நாமும் அனுபவத்தில் அறியலாம். பிரமாதமாகப் பேசுகின்றவர்களுடைய சொற்பொழிவைக் கேட்டு இருக்கின்றோம். மிக அழகாகக் காரண காரியங்களோடு தத்துவ ரீதியாகப் பேசுவார்கள். அப்பேச்சை நாம் கேட்டுவிட்டு விட்டுக்குப் போவதற்குள் மறந்துவிடுவோம். சில சமயம் எளிய மொழியில் பேசுகின்ற சிலருடைய வார்த்தைகளைக் கேட்கிறோம். அவை நம் உள்ளத்தில் புகுந்து நம்முடைய வாழ்க்கையில் பெரிய மாறுதலை உண்டுபண்ணி விடுகின்றன. தங்களுடைய அனுபவத்தையெல்லாம் சொற்களின் மூலம் வெளியிடுபவர்களுடைய சொற்கள் வீண்போவதில்லை. சொல்லுபவர் ஆத்ம சக்தி யுடையவராக இருக்கவேண்டும். அவர் சொற்கள் பிறருக்கு ஆத்ம சக்தியை நல்குகின்றன. போதிப்பவர் ஆத்ம சக்தியைப் பிறருக்கு வழங்குகிறார். கேட்பவர் அவரிடமிருந்து ஆத்ம சக்தியைப் பெறுகின்றார். உபதேசிப்பவர் ஆத்மசக்தி உடையவராக இருக்கவேண்டும். கேட்பவர் ஆத்ம சக்தியைப் பெறுவதற்குப் பரிபாக முடையவராக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் கொடுப்பதும் வாங்குவதும் சிறப்பாக அமையும்.

இந்தியாவின் தலைநகரமாக இருந்த கல்கத்தாவுக்கருகில் என் குருநாதர் வசித்து வந்தார். கல்கத்தா எங்கள் தேசத்தின் முக்கியமான நகரமாகும். அங்குச் சர்வகலாசாலை ஒன்று உண்டு. அச்சர்வகலாசாலையிலிருந்து நூற்றுக் கணக்கான நாஸ்திகர்களும், உலகாயதர்களும் ஆண்டுதோறும் வெளிவந்து கொண்டிருந்தனர். அவர்களும் என் குருநாதரிடம் வந்து அவருடைய உபதேசத்தைக் கேட்டனர். நானும் அம்மனிதரைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரைப் பார்க்கச் சென்றேன். அவர் சாதாரண மனிதராக இருந்தார். வெளித்தோற்றத்தில் அவரிடம் சிறப்பு ஒன்றும் தென்படவில்லை. மிக எளிய மொழியில் பேசுவது அவரது வழக்கம். "இவர் ஒரு பெரிய மனிதராக இருக்க முடியுமா!" என்று நான் சந்தேகப்பட்டேன். அவர் அருகில் சென்றேன். என்னுடைய வாழ்க்கை முழுவதும் அலைந்து மற்றவர்களிடம் கேட்ட கேள்வியாகிய "ஐயா! நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா?" என்னும் கேள்வியைக் கேட்டேன். "கண்டிருக்கிறேன்" என்று அவரிடமிருந்து பதில் வந்தது. "எனக்கு நீங்கள் காட்டமுடியுமா?" என்று நான் கேட்டேன். "காட்டமுடியும்" என்று பதில் கூறினர். "எப்படிக் காட்டுவீர்கள்?" என்று நான் கேட்டேன். "உன்னை நான் இங்குக்காண்கின்றேன். இதில் ஐயமில்லை. உன்னைக் காண்பதைவிட இன்னும் தெளிந்த நிலையில் கடவுளைக் காண்கின்றேன்" என்று கூறினர். அவர் கூறினது என் மனதில் ஆழ்ந்து பதிந்தது. கடவுளைக் கண்டிருக்கிறேன் என்று தைரியமாகக் கூறிய மனிதரை முதல் தடவையாக நான் இப்பொழுதுதான் பார்த்தேன். மதம் என்பது உண்மையானது; உணரக்கூடியது. உலகத்தை உணர்வதைவிட இன்னும் தெளிந்த நிலையில் கடவுளை உணரமுடியும். அன்று முதல் அவரிடம் நான் தினந்தோறும் போக ஆரம்பித்தேன். மதம் ஒருவருக்குக் கொடுக்கக்கூடிய பொருள் என்பதை அவரிடமிருந்து நான் தெரிந்து கொண்டேன். ஒருவனுடைய வாழ்க்கையைத் திருத்தியமைப்பதற்கு மகான்கள் அவனைத் தொட்டாலோ, பார்த்தாலோ போதும் என்பதை அவரிடமிருந்து நான் அறிந்துகொண்டேன். (தொடரும்)

# ஏகலைவ்யனின் குருபக்தி

காட்சி 1

(தந்தை வீரவர்மனும் மைந்தன் ஏகலைவ்யனும் உரையாடுதல்)

**ஏகலைவ்யன்:** அப்பா, கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் காலை உணவை முடித்தவுடன் ஒரு சிலரோடு கூடிக்கொண்டு எங்கேயோ போகிறீர்கள். சில நாட்களில் நண்பகலில் திரும்பி வருகிறீர்கள். வேறு சில நாட்களில் மாலையில் திரும்பி வருகிறீர்கள். இன்னும் ஏதோ சிலநாட்களில் மாலையில் போய் அடுத்த நாள் காலையில் திரும்பி வருகிறீர்கள். நீங்கள் எல்லாரும் எங்கே அப்பா போகிறீர்கள்? போய் என்ன செய்கிறீர்கள்?

**வீரவர்மன்:** நாங்கள் வேட்டையாடப் போகிறோம்.

**ஏகலைவ்யன்:** வேட்டையாடுதல் என்றால் என்ன அப்பா?

**வீரவர்மன்:** வனத்தில் வாழும் சில மிருகங்களைத் தேடிக் கண்டுபிடித்து அவைகளைக் கொல்லுவது வேட்டையாடல் என்று சொல்லப்படுகிறது.

**ஏகலைவ்யன்:** அவைகள் நம் வீட்டுக்கு வருவதில்லை. நம்மை எந்த விதத்திலும் அவைகள் உபத்திரவம் கொடுப்பதில்லை. அப்படியிருக்க அவைகளை ஏன் தேடிக் கண்டுபிடித்துக் கொல்லவேண்டும்?

**வீரவர்மன்:** அவைகளைக் கொன்றேயாக வேண்டும். நாம் வளர்த்துவரும் ஆடு மாடுகளை அவைகள் தாக்கிக் கொன்று தூக்கிக் கொண்டு போய்விடுகின்றன. நாம் வளர்க்கும் ஆடு மாடுகளைப் புசித்து அவைகள் உயிர் வாழ்ந்து வருகின்றன. அகப்பட்டால் மனிதனையும் அவைகள் கொன்று புசிக்கின்றன. ஆதலால் நம்மைப் பாதுகாத்தல் பொருட்டும் நம்முடைய கால்நடைகளைப் பாதுகாத்தல் பொருட்டும் நாம் அவைகளைக் கொன்றாக வேண்டும். மேலும் நாம் வேட்டையாட வேண்டிய மற்றொரு விலங்கு உண்டு. அது காட்டுப் பன்றி. கிழங்குவகைகளைத் தின்று அவைகள் உயிர் வாழ்கின்றன. காட்டுப் பன்றியை வேட்டையாடிக் கொல்வதால் நம்முடைய பயிர் பச்சைகளை நாம் காப்பாற்றுகிறோம். அவைகள் போக்கில் விட்டுவிட்டால் பூமியில் எதையும் நாம் சாகுபடிபண்ண முடியாது. இப்படி வெவ்வேறு விதங்களில் வெவ்வேறு காரணங்களை முன்னிட்டு வெவ்வேறு காட்டுமிருகங்களை நாம் வேட்டையாடுகின்றோம். அதற்காகவே நாங்கள் பகலிலும் இரவிலும் அடிக்கடி வனத்திற்குச் செல்லுகிறோம்.

**ஏகலைவ்யன்:** அப்பா தினந்தோறும் நாம் கோயிலுக்குப் போகிறோமே அங்கே கடவுள் வழிபாடு பண்ணுகிறோம் என்று சொல்லுகிறோமே கடவுள் வழிபாடு என்றால் என்ன?

**வீரவர்மன்:** உலகிலுள்ள உயிர்களனைத்தினுடைய தோற்றத்திற்கும் இருப்புக்கும் ஆதாரமாகத் தெய்வம் இருக்கிறார். அவரை நாம் கண்கொண்டு காணமுடியாது. ஆயினும் நமக்கு நலம்புரிய வேண்டுமென்று அவரிடம் விண்ணப்பித்தால் நாம் நலம் பெறுகிறோம்.

**ஏகலைவ்யன்:** நலம் என்றால் என்ன அப்பா?

**வீரவர்மன்:** மக்களில் சிலரை நாம் நேசிக்கிறோம். வேறு சிலரை வெறுக்கிறோம். ஆனால் யாரையும் வெறுக்காதிருப்பது நலன். யாருக்குமே துன்பம் விளைவியாதிருப்பது நலன். சந்தர்ப்பம் கிடைக்கிற பொழுதெல்லாம் மற்ற மனிதர்களுக்கு நாம் உதவி புரியவேண்டும். அவர்கள் கஷ்டப்பட்டால் அந்தக் கஷ்டத்தை நீக்க நாம் முழுமனதோடு முந்தவேண்டும். இத்தகைய செயல்கள் நலன் எனப்படுகின்றன.

**ஏகலைவ்யன்:** இச்செயல்களை நாம் நேரே செய்யலாமே. இவைகளைக் குறித்துக் கடவுளை ஏன் கேட்கவேண்டும்?

**வீரவர்மன்:** நம்மை அறியாது நம்மிடத்துச் சுயநலம் வளருகிறது. அந்தச் சுயநலம் பரநலனுக்கு இடம் தராது. நம்முடைய மனம் எப்பொழுதுமே நல்ல மனமாக இருக்க வேண்டும். மறைந்துகிடக்கிற சுயநலத்தையும், கெட்ட எண்ணங்களையும் நம்முடைய மனத்தினின்று போக்கவேண்டுமென்று தெய்வத்திடத்துப் பிரார்த்தனை பண்ணினால் அவருடைய அருளால் நம்முடைய மனது திருந்தியமைகிறது. அதற்காகத்தான் நாள்தோறும் நாம் கடவுளைப் பிரார்த்திக்கிறோம்.

**ஏகலைவ்யன்:** வனத்திற்குப் போகிற

பொழுது நீங்கள் சிலவேளைகளில் இதைத் தூக்கிச்செல்லுகிறீர்கள். வேறு சில வேளை களில் அதோ அங்கே மூலையில் சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருக்கிறவைகளைத் தூக் கிச்செல்லுகின்றீர்கள். இவைகளின் பெயர் என்ன? இவைகளை நீங்கள் எப்படிப்பயன் படுத்துகின்றீர்கள்?

**வீரவர்மன் :** (சுட்டிக்காட்டி) இக்கருவியின் பெயர் வில். இதில் தொடுத்து எய்யப்படு வது அம்பு. அதோ அங்கே சுவரில் அம்ப றாத் தூணியில் அவைகள் வைக்கப்பட்டிருக் கின்றன.

**ஏகலைவ்யன்:** அப்பா அவைகளை எப்படிப் பயன்படுத்துகின்றீர்கள்? எனக்குக் காட்டித் தாருங்கள்.

(வீரவர்மன் ஓர் அம்பை வில்லில் தொடுத்து எய்து காட்டுகிறான்.)

**ஏகலைவ்யன்:** அப்பா இது மிக நன்றாக இருக்கிறது. நாங்கள் விளையாடிக்கொண் டிருக்கிறபொழுது நாயோ, ஊர்ப்பன்றியோ ஏதாவது வந்தால் கல்லைவிட்டு எறிந்து விரட்டி யோட்டுகிறோம். பாம்பு அல்லது தேள் தென் பட்டாலும் கல்லால் அடித்து அவைகளைக் கொல்லுகிறோம். அச்செயல் சுலபத்தில் முடிந்துவிடுகிறது. விளையாடப்போகிற இடத் துக்கெல்லாம் நாங்கள் கற்களைத் தூக்கிக் கொண்டு போவதில்லை. நீங்கள்மட்டும் ஏன் இந்த வில்லையும் அம்புகளையும் சிரமப்பட்டுத் தூக்கிக்கொண்டு போகவேண்டும்?

**வீரவர்மன்:** உங்கள் விளையாட்டுக்குக் கற் கள் போதுமானவை. நாங்கள் கற்களை நெடுந் தூரம் வீசமுடியாது. ஒரு கல்லடி பட்டவுடனே அடுத்த கல்லடி வருவதற்கு முன்பு சிங்கம், புலி, கரடி முதலியவைகள் எங்களைத் தாக்கிக் கொன்றுவிடும். ஆனால் வில்லும் அம்பும் கொண்டு அவைகளுடைய மர்மஸ்தானங் களுக்குக் குறிபிடித்து எய்தால் குறிப்பிட்ட இடத்திலேயே அம்பு பாய்ந்து அந்த விலங்கு களின் வேகத்தை அடக்கிவிடும்.

**ஏகலைவ்யன்:** அப்படியா! நான் பெரியவன் ஆகின்றபொழுது வில்வித்தையில் நான் கெட் டிக்காரன் ஆக விரும்புகின்றேன். வில்லையும் அம்பையும்பற்றிச் சொன்னீர்கள். இனி அந்த மூலையிலிருக்கும் கருவியின் பெயர் என்ன? அதை எப்படிப் பயன்படுத்துகின்றீர்கள்?

**வீரவர்மன்:** அக்கருவியின் பெயர் வேல். நீண்ட காம்புடையதாக அது இருக்கிறது. காட்டுப்பன்றி அம்பு அடியைச் சமாளித்துக் கொண்டு ஓடிவிடும். ஆனால் முறையாக அதன் மீது வேல் வீசினால் அதனுடைய கடினமான உடலைப் பொத்துக்கொண்டு அது உள்ளே பாயும். வேலைத் தூக்கிக்கொண்டு அது வேக மாக நெடுந்தூரம் ஓட முடியாது. அதற்குள் ளாக வேறு பல வேல்களையும் வீசி அந்த விலங்கை நாங்கள் வென்று கொன்றுவிடு வோம்.

**ஏகலைவ்யன்:** அப்படியா, இப்படி வேட்டை யாடுவதில் எனக்கு விருப்பமில்லை. ஆனால் நல்ல வில்லாளியாக நான் விரும்புகிறேன். இந்தப் பெரிய வில்லைத் தூக்க என்னால் முடியாது. எனக்கேற்ற சிறிய வில்லும் அதற் கொத்துள்ள அம்புகளையும் அப்பா எனக்கு ஆயத்தப்படுத்தித் தருவீர்களா?

**வீரவர்மன்:** மகனே மிக நன்று. விளையும் பயிர் முளையிலே என்று சொல்லுவார்கள். நீ நல்ல வில்லாளியாவாயாக. உனக்கேற்ற சிறிய வில்லையும், அம்புகளையும் நான் விரைவில் ஆயத்தப்படுத்தித் தருகிறேன்.

### காட்சி 2

(வேடத் தோழர்களுடன் ஏகலைவ்யன் உரை யாடுதல்.)

**தோழன்–1:** ஏகலைவ்யா, அம்பு எய்துத வில் நீ எங்களை எல்லாம் விடச் சமர்த்தனாக இருக்கிறாய். வேட்டையாடுதற்கு நாம் அனை வரும் படைத்துள்ள பயிற்சி போதுமானது. அப்படியிருந்தும் நீ ஏன் ஒருமை மனதுடன் நெடுநேரம் வில் வித்தையிலேயே மூழ்கி இருக் கின்றாய்?

**ஏகலைவ்யன் :** மக்களுக்கிடையில் வித்தை கள் பலஇருக்கின்றன. அக்கலைகளைப் பயிலு தலில் மனிதன் அடைகிற முன்னேற்றத்திற்கு முடிவில்லை. வில்வித்தையைத் தனுர்வேதம் என்று சான்றோர்கள்சொல்லுகின்றனர்.எல்லா வித்தைகளின் மேலானநிலைகளெல்லாம்வேதங் கள் என விளக்கப்படுகின்றன. அத்தகைய வரம்பு கடந்த மேலான நிலை வில்வித்தைக்கும் உண்டு. என்னால் இயன்ற அளவு அதில் பயிற்சி பெற்று முன்னேற்றமடைய நான் விரும்பு

கிறேன்.

**தோழன் –2:** சட்டி சட்டியாக, விதவித மான உணவு வகைகளைச் சமைத்து வைத்திருந்தாலும் நாம் ஒவ்வொருவரும் உண்பது அவரவர் வயிற்றுக்கு ஏற்ற அளவே. மிகைபட உண்டால் அஜீர்ணம் வரும். வயிறு கெட்டுப்போம். குறைபட உண்டால் உடல் வலிவு குன்றிப்போம். உணவை அளவெடுத்து உண்பவனே அறிஞன். வாழ்க்கைக்கு அன்னவன் தகுதியுடையவன் ஆகின்றான். உணவு எவ்வளவு மேலானதாயிருந்தாலும் மீதூண் விரும்பேல் என்பது கோட்பாடு. அதே விதத்தில் வித்தைகளில் பலப் பலப் பகுதிகள் இருக்கலாம். அவைகளில் மேலாம் பகுதிகளும் இருக்கலாம். அவைகளால் நமக்கு ஆவதென்ன? நம்முடைய திறமை வாய்ந்த வாழ்க்கைக்கு ஏற்றவளவே நமக்குத் தேவையாயிருக்கிற கலைகளில் பயிற்சி பெற்றால் போதுமானது. மிகைபட்ட உணவு வயிற்றைக் கலக்கிவிடுவது போன்று மிகைபட்ட கலைப்பயிற்சி மூளையைக் கலக்கிவிடும். இந்த வம்பு நமக்கு எதற்காக?

**ஏகலைவ்யன்:** உண்ணும் உணவைப்பற்றி நீ மொழிந்தது முற்றிலும் மெய். ஆனால் கலையின் பாங்கு அத்தகையதன்று. அதில் வரம்பு கடந்து போதல் என்பதே இல்லை. வாழ்நாள் முழுதிலும் கலைகளை வளர்த்துக்கொண்டே வரலாம். கலை வளர்ச்சி அறிவைத் தெளிவு படுத்துகின்றது. அது ஒருநாளும் அறிவைக் குழம்பிப்போகும்படி செய்யமாட்டாது.

**தோழன்–3:** ஏகலைவ்யா நமக்கு இந்த வம்பு வேண்டாம். அளவுக்கு மீறி ஓயாது தின்றுகொண்டு இருப்பவனுக்குத் தொந்தி பெரியதாகிறது. உடல் திட்பத்தை அது கெடுக்கிறது. அதே விதத்தில் மிகைப்பட்ட கலை தலை வீங்கிப் போகும்படி செய்துவிடும். அந்த வம்பு நமக்கு வேண்டாம். வில்வித்தையில் இளைஞர்களாகிய நாம் பெற்றுள்ளபயிற்சி முதியோர்களுடைய பயிற்சிக்குக் கிட்டதட்ட சமனாயிருக்கிறது. நமக்கு அது போதும்.

**ஏகலைவ்யன்:** மிகைபட உண்பதால் தொந்தி தள்ளிக்கொண்டு வருவது உண்மை. ஆனால் கலையின் பாங்கு அத்தகையதன்று. அதிகம் கற்பதால் தலை வீங்கிப்போம் என்று எண்ணுவது குருட்டு நம்பிக்கை. சமுதாயத்தில் மகாபண்டிதர்களைப் பார்க்கிறோம். அவர்களுடைய தலை எங்கேயாவது வீங்கியிருப்பதைப் பார்க்கிறோமா?

**தோழன்–1:** மகா வித்வான்கள் ஆவதற்கென்றே அவர்கள் பிறப்பெடுத்தவர்கள். நம்முடைய பிறப்பு அத்தகையதன்று. விளையாட்டுப் போன்று வேட்டையாடி வயிறு வளர்க்க நாம் பிறந்துள்ளோம். நாம் பெற்றுள்ள திறமை நம் தரத்துக்குப் போதுமானது.

**ஏகலைவ்யன்:** மக்களாகப் பிறந்திருக்கிறவர்களுக்கிடையில் இன்னின்னார் இன்னின்ன கலைகளுக்குத் தகுதி வாய்ந்தவர்கள் என்னும் பாகுபாடு கிடையாது. பல தடவைகளில் மகா பண்டிதர்களுக்குப் பிள்ளைகளாக அறிவிலிகள் தோன்றுவதுண்டு. பாமரர்களுக்குப் பிள்ளைகளாகப் பேரறிவு படைத்தவர்கள் பிறப்பதும் உண்டு. கலைத்திறமைக்கும் பிறப்புக்கும் சம்பந்தமில்லை.

**தோழன்–2:** ஏகலைவ்யா, நீசொல்லுவது சரியன்று. குலத்தளவேயாகுமாம் குணம் என்றும் குலத்தளவேயாகுமாம் கல்வி என்றும் பெரியோர்கள் பலர் பேசிக்கொள்ளுகிறார்கள். ஓர் ஆழாக்கில் இரண்டு ஆழாக்கு அரிசியை அடைத்து வைக்க முடியுமா?

**ஏகலைவ்யன்:** அரிசியின் ஸ்தூல அமைப்பு வேறு. அறிவின் நுண்மை வேறு. அரிசிக்கு எடை உண்டு. பருமன் உண்டு. அறிவோ வரம்பு கடந்தது. மானுட மண்டைக்குள் இத்தனை விதமான அறிவுகளைத் திணிப்பது எங்ஙனம் என்று கருதுவது மடமை. மனத் திறமைக்குச் சான்று ஒன்று சொல்லுகிறேன் கேள் தூங்குகிறபொழுது கனவு காண்கின்றோம். கனவிலே பெரிய பெரிய மலைகளைப் பார்க்கிறோம். அவ்வளவு பெரிய மலைகள் மனதுக்குள் எப்படி ஒடுங்கியிருந்தன என்று கேட்கலாகாது. நாம் காண்கிற புற உலகுக்கு நிகராகப் பெரிய பெரிய கனவு உலகங்களைக் கற்பிக்க வல்லது மனது. அறிவுத் திறனுக்கு வரம்பு கிடையாது என்பதற்கு நாம் காணுகின்ற கனவே சான்றாகிறது.

**தோழன்–3:** ஏகலைவ்யா அது இருக்கட்டும். மேலாம் கலைகளுக்கு உயர்ந்த இனத்தினரே தகுதி வாய்ந்தவர்கள் என்று உலகத்தவர்கள் பேசிக்கொள்ளுகிறார்களே அக்கோட்

பாட்டை மாற்றியமைக்க நமக்கு முடியுமா?

**ஏகலைவ்யன் :** மானுட வாழ்க்கையைப் பற்றிய கோட்பாடு ஒன்று உண்டு. பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய் தொழில் வேற்றுமையான். செய் தொழில் வேற்றுமை என்பது பயிற்சியைப் பொறுத்ததாகிறது. நல்ல பயிற்சி கொடுத்தால் கால்நடைகள் நடனம் புரிகின்றன. சில கேள்விகளுக்குத் தலையசைத்து அவைகள் விடை தருகின்றன. பயிற்சிக்கு வரம்பு கிடையாது. பயிற்சியின் விளைவாகப் பாமரன் பண்டிதனாகலாம். பயிற்சியின்மையின் விளைவாக மானுடர் மாக்கள் ஆவார்கள். மேலாம் பயிற்சியை நாடுபவர் அறிவுடையோராவர்.

**தோழன்–1 :** பயிற்சியை அனுசரித்து மனிதன் மேலோன் ஆகிறான், அல்லது கீழோன் ஆகிறான் என்று நீ கூறுகிறாய். இப்பொழுது நாம் எல்லாரும் பெற்றுள்ள பயிற்சி நல்வாழ்வு வாழுதற்கு நமக்குப் போதுமானது. அதற்கு மேல் அசாதாரணமாகப் பகல் கனவு காண்பது போன்று, நீ ஏதேதோ வல்லமைகளை வில் வித்தையில் பெறவேண்டுமென்று கருதியுள்ளாய். அதனால் நமக்கு வருகிற லாபமென்ன?

**ஏகலைவ்யன் :** என்ன லாபம் வரும் என்னும் கோட்பாட்டைப் பொருளைக்கொண்டு முடிவு கட்டமுடியாது. வானசாஸ்திரம் என்பது ஒன்று இருக்கிறது. அது நட்சத்திரங்களுடைய நடமாட்டத்தைப் பொறுத்தது. ஒரு சிலர் அக் கலையிலேயே ஆயுள் முழுதையும் செலுத்துகின்றனர். அதனால் என்ன லாபம் என்று நாம் கேட்கலாகாது. இயற்கையின் அமைப்பிலுள்ள மகிமையைக் கண்டு மகிழ்ந்திருப்பதே வான சாஸ்திரி ஒருவன் பெறுகிற ஊதியமாகும்.

**தோழன்–2 :** வான சாஸ்திரி ஒருவன் விண்ணில் மின்னிக்கொண்டிருப்பவைகளைப் பார்த்து மகிழ்வடைகிறான். அதுபோன்று எத்தகைய கலையில் ஈடுபட்டு நீ மகிழ்வடைய எண்ணிக்கொண்டிருக்கிறாய்?

**ஏகலைவ்யன் :** வில் வித்தையில் மேலான பகுதி தனுர் வேதம் என்னும் பெயர் பெறுகிறது. அதில் கருத்தைச் செலுத்த நான் விரும்புகிறேன்.

**தோழன்–3 :** மேலாம் பகுதி என்று பகர்ந்தாயே அதன் பாங்கு என்ன என்பதைச் சற்று விளக்கு பார்ப்போம்.

**ஏகலைவ்யன் :** முன்பொரு காலத்தில் தசரத ராமன் என்ற நரோத்தமன் ஒருவன் இருந்தான். அவன் தனுர்வேதத்தின் நுட்பங்களை விசுவாமித்திரரிடமிருந்து கற்றுக் கொண்டான். சாதாரணமாக நாம் எய்கிற அம்பு நேராகக் குறியை நோக்கிப் போகிறது. அதற்கு மேல் அது ஒன்றுக்கும் உதவாது. ஆனால் மந்த்ர சக்தியோடு கூடிய அம்பு ஆனது இலக்கு எங்கிருந்தாலும் அதைத் தேடிப் பிடித்து அடிக்கும். பிறகு எய்தவனிடத்தே அது திரும்பி வரும். இத்தகைய வல்லமை தனுர் வேதத்தினுடைய மேலாம் பகுதியாகிறது.

**தோழன்–1 :** இத்தகைய விசித்திரமான வித்தையை உனக்குப் புகட்டித் தருதற்கு இப்பொழுது உலகத்தில் யார் இருக்கிறார்கள்? விசுவாமித்திரருடைய காலம் கடந்துஓடிவிட்டதே!

**ஏகலைவ்யன் :** அக்காலத்திலிருந்த விசுவாமித்திரருக்கு நிகராக இக்காலத்தில் ஹஸ்தினபுரத்தில் துரோணச்சாரியர் ஒருவர் இருக்கிறார் என்று கேள்விப்படுகிறேன். அவரிடம் இக்கலையைப் பயில நான் விரும்புகிறேன்.

**தோழன்–2 :** ஏகலைவ்யா, நீ ஒரு பைத்தியக்காரன். துரோணச்சாரியார் என்பார் ஒருவர் இருக்கிறார் என்றால் அவர் உன்போன்ற வேடர் வேந்தன் மகன் ஒருவனுக்கு அந்த வித்தையை ஏன் புகட்ட வேண்டும்? ஒருவேளை அவர் புகட்டினால் அதை வைத்துக்கொண்டு நீ அடைகிற மேன்மை யாது?

**ஏகலைவ்யன் :** கலையில் முன்னேற்றமடைவதே மேன்மை. தனுர்வேதம் பயின்று அதன் மகிமையில் நான் மூழ்கி இருப்பேன்.

**தோழன்–1 :** ஏகலைவ்யா, நீ ஆகாயக் கோட்டை கட்டுகிறாய். இப்பொழுது நாம் பெற்றிருக்கிற பயிற்சி நம்முடைய ஜீவிதத்திற்குப் போதுமானது. இதற்கு மேல் எதை எதையோ நாடிப் போகவேண்டாம்.

**ஏகலைவ்யன்:** மேலான குறிக்கோள் ஒன்றை நாடிப் போகின்றேன். அது வாய்க்காவிட்டாலும் அதன்பொருட்டு நாட்டம் பூண்டிருப்பதே பாராட்டத்தக்கது.

**தோழர்கள் :** ஏகலைவ்யா, உன் போக்கு அலாதியானது. உன் விருப்பம்போல் வேண்டியதைப் பண்ணிக்கொள். (தொடரும்)

# உலகவாழ்வும் ஆன்மீகவாழ்வும்

( சுவாமி ஆத்மானந்தர் )

உலக வாழ்வில் மனிதனுக்கு இறைவனைத் தவிர வேறு துணை இல்லை. உனது வாழ்வின் ஒவ்வொரு கணமும் இறைவனை நாடிச் செல்வதாய் இருக்கட்டும். இறைவனை நாடிச் செல்லும் போதெல்லாம் நாம் பலமுடையவர்களாகின்றோம். இறைவனைப் புறக்கணிக்கும் போதெல்லாம் நாம் பலவீனர்களாகின்றோம். நம் விருப்பம்போல் காரியங்கள் நிகழவில்லையே யென்று கவலைகொள்ளலாகாது. இந்தவுலகில் எந்த மனிதனுடைய வாழ்விலும் அவன் விருப்பம்போல் எல்லாக் காரியங்களும் நிறைவேறுவதில்லை. நாடாளும் வேந்தனயினும் சரி; அரசர்க்குற்ற மந்திரியாயினும் சரி; கற்றறிந்த பேரறிஞனயினும் சரி; செல்வம் நிறைந்த கோடீசுவரனயினும் சரி; அனைத்தையும் துறந்த துறவியாயினும் சரி இவர்களுடைய விருப்பம் அனைத்தும் ஒருபோதும் நிறைவேறுவதில்லை. இவர்களில் எல்லாருமே ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் துன்பதுயரங்களுக்கு உட்பட்டே ஆகவேண்டும். மனிதனகப் பிறந்தவன் துன்ப துயரங்களுக்கு உட்பட்டே ஆகவேண்டும். மனிதனகப் பிறந்தவன் துன்ப துயரங்களுக்கு உட்படாது இருக்க முடியாது. இறைவனின் அவதாரம் என்று போற்றப்படும் ராமன் எத்துணைத் துன்ப துயரங்களுக்கு உள்ளானன்? இனி, சீதாபிராட்டி பட்ட துன்பம் அளவிடற்கரியதாகுமோ! துன்பத்தை அனுபவிப்பதற்கென்றே பிறந்தவளல்லவோ சீதை! மகா புனிதர்களான ராமனும் சீதையும் இன்னல் பலவற்றிற்கு இலக்காகும்போது நாம் எம்மாத்திரம்? அதனல் துன்ப துயரங்களிலிருந்து தப்பித்துக்கொள்ள முயல்வதைவிட தெய்வத்தின் திருவருள் என்று அவற்றைச் சகித்துப் பழகுவது நம்மைப் பக்குவப்படுத்தத் துணைபுரியும்.

உலகப் பொருட்களை நாடாதே. ஐம்புல இன்பத்தைத் தேடாதே. உலகம் தருகின்ற சுகம் உண்மையான சுகமன்று. உலகத்தவர் அடைகின்ற சுகத்தைக் கண்டு ஏங்காதே. அந்த மனிதன் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிருன்! எவ்வளவு உயர்ந்தவனக இருக்கிருன்! எவ்வளவு பேரும் புகழும் படைத்து விளங்குகிருன்! எவ்வளவு உயர் அதிகாரங்கள் உடைத்திருக்கிருன்! எவ்வளவு வல்லமை உள்ளவனக விளங்குகிருன் என்று வியப்படையாதே. இந்தப் பெயர் பட்டம் பதவிகளெல்லாம் நீடித்துநில்லா. அவை இன்றிருந்து நாளை மறைந்து போகக்கூடியவை. எத்துணை எத்துணையோ மன்னர்கள் தோன்றி மறைந்து போய்விட்டார்கள். எத்துணை எத்துணையோ மாவீரர்கள் தோன்றி அழிந்து போய்விட்டார்கள். உலகம் தருகின்ற பெருமைகள் பெருமைகளே அல்ல. நம்மைப் பரத்தின் பால் இட்டுச் செல்லும் அருட்பேறே பெருமைக்குரியதாகும். அருட்செல்வமே செல்வத்துட் செல்வமாகும். அருளின்பமே இன்பத்துள் இன்பமாகும். அருட் செல்வத்தோடு ஒப்பிடும்போது பொருட் செல்வம் பொருளற்றதாய்ப் போய்விடுகின்றது. அருட்செல்வம் சேரச் சேரப் பேரானந்தம் பெருகிக்கொண்டே போகும். ஆனல் பொருட் செல்வம் சேரச் சேரத் துன்ப துயரங்களும் கவலையும் பெருகிக் கொண்டே போகும். கவலை ஏதுமின்றிப் பொருளைப் பாதுகாக்க இயலுவதில்லை. பொருட் செல்வம் மிகுதியாகப் படைத்திருப்போன் பாக்கியவானல்லன். பேராசைபிடித்த செல்வந்தனைவிடப் போதுமென்ற மனம் படைத்தவன்எவ்வளவோபாக்கியவானுவான்.

ஆத்மீக வாழ்வில் நாட்டம் அதிகரிக்கும் அளவிற்குப் பூவுலக வாழ்வில் நாட்டம் குறைகிறது; மண்ணுலக வாழ்வே ஒரு சுமையாகத் தோன்றுகிறது. பஞ்சபூதங்களாலான உடலுக்குத் தேவைகள் பல இருக்கின்றன. நம் விருப்பம்போல் நமது உடல் நமக்கு வசப்பட்டிருப்பதில்லை. நம்மில் பெரும்பாலோர் உடலுக்கு அடிமைகளாகவிருக்கின்றோம். அழிந்து போகின்ற இவ்வுடலினிடத்து மாந்தர் எத்துணை வாஞ்சை வைத்திருக்கின்றனர்! பிச்சை எடுத்தும், அவமானங்கள் பலவற்றிற்கு உள்ளாகியும் இவ்வுடலின் தேவைகளை நிறைவேற்ற முயல்கின்றனர். உடலின் தேவைகளைத் திருப்தி செய்ய தர்மத்தையும், சத்தியத்

தையும் கூடப் புறக்கணித்துவிடுகின்றனர். படித்துப் பட்டம் பெற்றோர் பலரும் உடலையே தெய்வமெனப் பூஜித்து வழிபடுகின்றனர். பூவுலக வாழ்வைப் பற்றி நினைக்கின்றார்களே யொழிய பரலோக வாழ்வைப் பற்றிக் கருத்தில் கொள்ளுகின்றார்களில்லை. இது பரிதாபத்திற்குரிய நிலையாகும்.

அக்ஞானம் மனிதனைப் பந்தபாசத்தில் தள்ளுகிறது. அறியாமை மிக்கோர் உலகில் கட்டுண்டு கிடக்கின்றனர். அன்னவர் பரத்தினைப் பற்றிய சிந்தனை அற்றவர்களாய் முழுக்கமுழுக்க லௌகீகக் காரியங்களிலேயே ஆழ்ந்து கிடக்கின்றனர். லௌகீக விஷயங்களைத்தவிர வேறொன்றிலும் அவர்கள் நாட்டம் கொள்வதில்லை. காலை முதல் மாலை பரியந்தம் உலக விஷயங்களை ஓயாது பேசிக்கொண்டும், செவி சாய்த்துக் கொண்டுமிருப்பர். ஆனால் பாரமார்த்திக விஷயங்களுக்குச் சிறிதும் செவி சாய்க்கார். தாங்கள் தேடும் உலகப் பொருட்கள் அனைத்தும் ஒரு நாள் அழிந்து போகும் என்பதை அவர்கள் முதலில் அறிவதில்லை. வாழ்வின் இறுதியில் இந்த உண்மையை அவர்கள் உணருகின்றனர். காலங்கடந்து உணர்வதனால் பயனொன்றுமில்லாமல் மரணமடைகின்றனர். வாழ்வு அநித்தியமானது; உலகப் பொருட்கள் அனைத்தும் அநித்தியமானவை. இந்த உண்மையை எவ்வளவு விரைவில் உணருகின்றோமோ அவ்வளவுக்கு நாம் பாக்கியவான்களாவோம். ஞானிகளும் பக்தர்களும் உலகின் நிலையாமையை உணர்ந்தார்கள். அதனால் பற்றற்றவர்களாய் வாழ்ந்தார்கள். பரமனைத் தவிர வேறு பற்றின்றி வாழ்ந்தார்கள். உலகப்பொருட்களிடத்து நம்பிக்கை வைக்காது தெய்வத்திடத்து முழு நம்பிக்கை வைத்தார்கள். உலகப் பொருட்களிடத்துக் கொள்ளும் நாட்டம் நம்மனதை மலினப்படுத்துகின்றது. பாரமார்த்திக நாட்டமோ மனதைத் தூயதாக்கி மானுட வாழ்வைப் பெருவாழ்வாக்குகிறது. ஆன்மீக வாழ்வு வாழவேண்டும்; ஞான வாழ்வில் முன்னேற்றமடைய வேண்டும் என்னும் பேரவாவை நாள்தோறும் வளர்த்துக் கொள்ளவேண்டும். பரநாட்டம் வளர வளர உள்ளம் பரிசுத்தமடைகிறது. காலம் கழிந்துபோகுமுன் பரநாட்டம் கொள்ள வேண்டும். பரவாழ்வில் ஈடுபட்டு இதயம் புனிதமடைய வேண்டும். புனித இதயமே ஆன்ம தரிசனத்தை நமக்கு அளிக்கவல்லதாகும்.

"காப்பது விரதம்" என்பது கோட்பாடு. விரதங்களை நிறைவேற்றக் காலங் கடத்தலாகாது. உயர்ந்த லக்ஷியங்களை மேற்கொள்ளக் காலத்தை ஒத்திப்போடலாகாது. சாதனைக்கேற்றகாலம் இளமையே. மனத்தை எதிர்த்து யுத்தம் செய்வதற்குரிய காலம் இளமையேயாகும். மனதைப் பரிசுத்தப்படுத்தித் திருத்தி அமைத்தற்குரிய காலம் இதுவேயாகும். அதனால் காலத்தை வீணாக்காது சாதனையில் ஈடுபடவேண்டும். ஆன்மீக வாழ்வில் எத்தனையோ இடையூறுகள் நேரிடலாம். அவைகளைக் கண்டு மனஞ்சோர்வுறலாகாது. துன்புறுங்காலம் தான் நன்னெறியைப் பின்பற்றுதற்கு ஏற்ற காலமாகும். நம்மிடத்து எத்தனையோ ஆசாபாசங்கள், துர்க்குணங்கள் நிறைந்து கிடக்கின்றன. உடலுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் பரியந்தம் குற்றம்குறைகளுக்கு உள்ளாகாமல் இருக்க இயலாது. உடலையும், மனதையும் வெல்லவேண்டும். நம் கட்டளைக்கு அவை அடங்கி நடக்கவேண்டும். அப்போதுதான் மனவமைதியைப் பெற முடியும். பரிசுத்தமான இதயம் மனவமைதியுடையவனுக்கே வந்து வாய்க்கின்றது. இறைவழிபாடு நமக்கு இதய பரிசுத்தத்தைத் தந்தருளும். காலையும், மாலையும் கடவுள் வழிபாட்டில் ஈடுபட்டுப் பரிசுத்தமான இதயத்தைப் பெறுவோமாக. இறைவனை நாடிப் பொறுமையோடு அவனருளைப்பெறக் காத்திருப்போமாக.

மனம் பலவீனம்படைத்தோர் உயர்ந்த காரியங்களைச் சாதிக்கத் தகுந்தவரல்லர். உயர்ந்த நன்னெறியைப் பின்பற்றவும் தகுந்தவரல்லர். ஆத்ம சாதகனுக்கு உறுதியான மனம் தேவை. எடுத்துக்கொண்ட விரதத்தை உயிரைக் கொடுத்தும் காப்பாற்றும் திறன் இருக்க வேண்டும். உறுதியான உள்ளத்துடன் முறையாகச் சாதனையைத் தொடர்ந்து செய்ய வேண்டும். சாதனையை ஒருநாள் செய்வதும் பலநாட்கள் செய்யாமல் விடுவதும் தகாது. பலர் ஆன்மீக நூல்களை வாசிப்பர்; பிறர்க்கும் எடுத்துப்புகட்டுவர்; நூல்கள் பலவும் இயற்று

வர். ஆனல் சாதனை மட்டும் செய்யமாட்டார்கள். அதனல் பயனென்றுமில்லை. ஆத்மார்த்தமான நூல்களை வாசிக்க வேண்டும். தாங்கள் வாசித்து அறிந்துகொண்டதை அனுபவத்துக்குக்கொண்டுவரமுயலவேண்டும். படித்தலோ, பேசுதலோ, நூல் இயற்றுதலோ முக்கியமல்ல; அனுபவம் தான் முக்கியமானதாகும். நீ படிப்பதையும், பேசுவதையும், எழுதுவதையும் வாழ்க்கையில் வாழ்ந்து காட்டுவாயாக. எழுதுவது, பேசுவதை விட வாழ்ந்து காட்டுவது மக்களது மனதைக் கவரவல்லதாகும். சாதகனது வாழ்வு சாஸ்திரங்களுக்கு விளக்கமாக அமைய வேண்டும். அதுவே பாராட்டுதற்குரிய பெருவாழ்வாகும்.

சாதகனுக்குச் சிரத்தைஎன்பது இன்றியமையாதது. சிரத்தைக்கேற்பச் சாதனத்தில் முன்னேற்றம் அடையலாம். ஆரம்ப சாதகனிடத்துத் தீவிரமான அருள்தாகம் இருக்க வேண்டும். ஆரம்பத்திலேயே அருள்தாகமின்றி இருப்பவன் நீண்டநாள் சாதனத்தில் நிலைத்து நில்லான். கொஞ்சநாட்கள் சாதனை செய்தவுடன், அல்லது காலையும் மாலையும் அரை மணி நேரம் கடவுள் வழிபாடு செய்யத் தொடங்கியவுடன் மிகப் பெரிய பக்தர்களென நம்மை நினைத்துக்கொள்ளுகிறோம். அனுபூதி அடைதற்பொருட்டு எத்துணை அரும்பாடுபட வேண்டுமென்பதை நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. பொருளைத் தேட மனிதன் எவ்வளவு முயற்சி எடுத்துக் கொள்ளுகிறன். அந்த அளவிற்காவது அருளைத் தேட நாம் முயலுகின்றோமா என்றல் இல்லையென்றுதான் கூற வேண்டும். சாதனத்திற்குரிய முதற்படியைக் கூட நெருங்காத நிலையில் இருந்துகொண்டு சமாதியைக் கனவு காணுவது எவ்வளவு மதியீனம்? ராஜயோகம் புகட்டுகின்ற யமத்தைக் கடைப்பிடிக்கின்றோமா? யமம் புகட்டுகின்ற அஹிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம், கள்ளாமை, ஏலாமை ஆகிய ஐந்தில் ஒன்றையேனும் முழுவதும் கடைப்பிடிக்கின்றோமா? சாதகன் பணிவோடும், பொறுமையோடும் சாதனத்தில் ஈடுபட வேண்டும். குறியை நாம் அறவே மறந்துவிடலாம். அதனல் நமக்கு நஷ்டம் ஒன்றும் வந்துவிடாது. நெறியை முறையாகப் பின்பற்றிச் சென்றல் குறி நம்மைத் தேடி வருவதைக் காணலாம். இன்று தொடங்கலாமா நாளை தொடங்கலாமா என்று சாதனத்தை ஒத்திப் போடாது சாதனையை இப்பொழுதே செய்யவேண்டும்.

ஒரு பெண்ணின் வயிற்றினின்று உதிக்கின்ற மனிதன் கொஞ்சகாலம் வாழ்ந்திருக்கின்றன். பின்னர் மண்ணோடு மண்ணய் மறைந்துபோய் விடுகிறன். பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடைப்பட்ட காலம்தான் வாழ்வு எனப்படுகிறது. வாழ்வில் பெரும்பாலும் துன்பத்தையும், அவமானத்தையும்தான் மனிதன் அனுபவிக்கிறன். காமம் மனிதனை அரித்துத் தின்கிறது. காமத்தை நிறைவேற்றுதல் என்ற ஒரே காரணத்திற்காகத்தான் பெரும்பாலான மக்கள் தங்கள் வாழ்வைப் பலியிடுகின்றனர். காமம் தான் மாந்தரைக் கெடுத்து துன்பத்தில் ஆழ்த்துகிறது. ஆத்ம சாதனத்துக்கும் மிகப் பெரிய இடையூருக இருப்பவை காமமும் காசாசையுமேயாம். இதனைக் காமகாஞ்சனம் என்றுர் ராமகிருஷ்ணர். இந்த இரண்டிற்கும் வசப்படாதவர் பாக்கியவான்களாவர். அன்னவர் ஆத்ம சாதனத்தில் எளிதில் முன்னேற்றமடைவர். ''அற்றது பற்றெனில் உற்றதுவீடு'' என்பதன்றோ ஆன்றோர் வாக்கு. ''காமம் இல்லையெனில் கடுங்கேடு எனும் நாமமும் இல்லை; நரகமும் இல்லையே'' என்பது ஆன்றோர் வாக்கு. ராவணன் எவ்வளவோ பெரியவன்; சகலகலா வல்லுநன்; நான்மறைகளை ஓதியவன்; கடுமையான தவத்தில் ஈடுபட்டவன்; வரபலம் மிக்கவன்; மூவுலகையும் வென்றவன்; நீண்ட ஆயுள் பெற்றவன்; விண்ணவரையும் ஏவல் கொண்டவன்; ஆயினும் காமத்தைக் கட்டுப்படுத்தாது விட்டு விட்டான். எதிர்ப்போரையெல்லாம் வெற்றி கொள்ளும் வீரம் இருந்தும், பிறர்மனை நோக்காத பேராண்மை என்கின்ற ஒப்பற்ற வீரம் அவனிடத்து அறவே இல்லாதுபோய்விட்டது. அந்த ஒப்பற்ற ஆண்மை இல்லாமைதான் அவனுக்கு அழிவைத் தந்தது. நம்மிடத்துள்ள எல்லா நலன்களையும் அடியோடு அழித்துத் துடைக்க வல்லது காமம். சாதகன் அதற்கு இடந்தரலாகாது. விழிப்புடனிருந்து அதனை வெற்றி கொள்ளவேண்டும். பெண்களைக் காணும் போதெல்லாம் அன்னை பராசக்தியாகவும்,

தன்னை ஈன்றெடுத்த தாயாகவும் கருதினால் காமம் நம்பால் தலையெடுக்காது. "அன்னை வடிவமடா; இவள் ஆதிபராசக்தியடா!" என்ற பாரதியின் கூற்றைப் பெண்களைக் காணுந் தோறும் நினைவில் கொள்ளவேண்டும். காமத்தினின்று விடுபடுவதற்கு இது உற்ற உபாய மாகும்.

உலகின் நிலையாமையை, மானுட உடலின் அற்ப ஆயுளை அறிந்துகொள்ளுமளவிற்கு மனிதனுக்கு ஆன்மீக வாழ்வில் நாட்டம் அதிகரிக்கின்றது. இளமை மனம் உலகை நாடி ஓடுகின்றது. மனதிற்கு இளமை முதுமை என்பது ஒன்றும் இல்லை. சான்றோர் தங்களது மனத்தைச் சந்ததமும் இளமையோடுதான் வைத்திருக்கின்றனர். உடல் அபிமானம் அதிகரிக்கின்ற அளவிற்கு உடலின் முதுமை மனதைத் தாக்குகிறது. உடலபிமானம் குறையக் குறைய உடலின் முதுமை மனதைப் பாதிப்பதில்லை. தேகத்தைத் தான் என்று கருதாத அனுபூதிமான்கள் யாண்டும் ஒரேவித மனப்பாங்கு படைத்திருக்கின்றனர். பெரும்பாலான இளைஞர்கள் உடலபிமானம் மிக்கவரேயாவர். அதனால் அவர்கள் உலக இன்பத்தையே நாடுகின்றனர். பொறிகளின் மூலம் பெறுகின்ற இன்பமே பேரின்பமென அன்னவர் நினைக்கின்றனர். வேண்டிய மட்டும் புலனின்பத்தில் மூழ்க முற்படுகின்றனர். உலகம் அநித்திய மானது என்பதையும், இந்திரிய இன்பம் துன்பத்தைத் தரவல்லது என்பதையும் அனுபவத்தின் மூலம் அறிய வருகின்றனர். இந்த அனுபவம் அவர்களுக்கு நல்லறிவைத்தருகின்றது; விவேகத்தை வளர்க்கின்றது. ஆன்மீக வாழ்வில் ஆவலைத் தூண்டுகின்றது. புறவுலகம் மன அமைதியைத் தராது என்பதை உணர உணரப் பாரமார்த்திக வாழ்வில் ஆர்வம் அதிகரிக்கின்றது. சமுதாயத்தில் வயது முதிர்ந்தவர்களுக்குரிய அருள்நாட்டம் இளைஞர்களுக்கு இல்லாதிருப்பதை இப்பொழுதும் காணலாம். இளம் வயதில் கடவுள் இல்லையென்று வாதிட்டோர் பலர். முதுமையில் கடவுளுண்டு என்று ஒப்புக்கொண்டு கோயில் தோறும் சென்று வழிபடுவதைப் பார்க்கலாம். ஒரு காலத்தில் நித்தியமாகத் தெரிந்தது மற்றொரு காலத்தில் அநித்தியமாகத் தெரிகின்றது. ஒரு காலத்தில் இன்னாததாகத் தெரிந்தவொன்று இன்னொரு காலத்தில் இனியதாகத் தெரிகின்றது. பொதுப்பட பரநாட்டம் மாந்தர்க்கு முதுமையில் தான் வருகின்றது. இந்தநிலை மாறியமைய வேண்டும். சாதனைக்கு ஏற்ற காலம் இளமை தான். இளமை மனம் நன்கு கனிந்த கனிக்கு நிகரானது. காக்கை குருவிகளால் கொத்தப் படாத கனிக்கு நிகரானது. இறைவனுக்குரிய நைவேத்தியப் பொருளாக்குதற்கு மிகவும் பொருத்தமானது. மாசற்ற அன்பர் நெஞ்சம் தான் ஈசன் உறையும் கோயிலாகிறது. இளைஞர் உள்ளம் மாசற்றதாக, களங்கமில்லாப் பளிங்குபோன்றதாக இருக்கின்றது. பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைக் காலையும் மாலையும் கடவுள் வழிபாட்டில் ஈடுபடுத்தவேண்டும். குழந்தைகளுக்கு உண்ணவும், உடுக்கவும் கற்றுத்தருதற்கு முன்னமே கடவுளை வழிபடுதற்குக் கற்றுத் தரவேண்டும். பொருட்செல்வத்தைத் தேடப் புகட்டுதற்கு முன்னமேயே அருட் செல்வத்தை அவனை அறியாமலே தேடப்பயிற்றவேண்டும். பொருள்படைத்தோர் மிகுந்த நாடு போற்றுதற்குரிய பெருநாடன்று. அருள் படைத்தோர் மிகுந்த நாடே போற்றுதற்குரிய பெரு நாடாகும். பல்லாயிரம் ஆண்டுகளாகப் பாரதமாதா அருளாளர்களைத்தான் உற்பத்தி செய்து வந்திருக்கிறாள். அருளாளர்களாவதுதான் நமது நாட்டு மாந்தரின் வாழ்க்கைக் குறிக்கோளாகும். இந்த உயரிய நோக்கம் இன்று கொஞ்சம் மங்கிப் போயிருக்கிறது. மேலை நாட்டு, நவநாகரிக மோகமும்; சினிமாப் பித்தும் இளைஞர்களை இப்படியும் அப்படியும் ஆட்டி அலைக்கிறது. மனம் போன போக்கில் வாழ்வதுதான் வாழ்க்கை என அன்னவர் கருதுகின்றனர். ஆனால், இந்தநிலை நீடித்து நிற்காது. பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரது காலத்துக்குப்பின் பாரதமாதா புத்துயிர் பெற்றெழத் தொடங்கி விட்டாள். பாரதமாதாவின் நாடி நரம்பெல்லாம் ஆன்மீக ரத்தம் ஓடத்தொடங்கி விட்டது. மாந்தரது மனத்தகத்துப் பரநாட்டம் மேலோங்கி வருகிறது. எதிர்காலத்தில் பாரதம் தனது பழம்பெருமையை மீண்டும் அடையும். இது அனுபூதிமான்களது ஞானக்காட்சியாகும். அந்நாள் விரைவில் வந்தமைய நாம் பாடுபடுவோமாக!

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி : (150) *சபரிமலைக்குச் செல்லும் ஸ்ரீ ஐயப்பன்பக்தர்கள் 54 அல்லது 108 மணிகள் கொண்ட மாலையை அணிந்தால் தான் விரதம் தொடங்குவதாய் ஐதிகம் இருந்து வருவதற்கும், ஹிந்து, முஸ்லீம், கிறிஸ்தவர்களும் இம்மாலைகளை அணிவதற்கும் உள்ள தத்துவம் என்ன ?***

ஜப மாலையைப் பயன் படுத்துவது மதங்கள் யாவுக்கும் பொதுவாக அமைந்திருக்கிறது. நல்ல சாதனை முறைகளைச்சமயத்தவர்கள் எல்லாரும் பயன் படுத்தலாம் என்பதற்கு இது சான்றுகிறது. புரிகின்ற சாதனவகைகளைக் கூர்ந்து ஆராய்ந்து பார்த்தால் அவைகளுக்கிடையில் வேற்றுமை மிகக் குறைவு என்பது வெளியாகும். மதங்களுக்கிடையிலே எங்கு வேற்றுமை இருக்கிறது என்பதைக் காண்பதற்குப் பதிலாக எங்கு ஒற்றுமை இருக்கிறது என்று கண்டு பழகுதலே நல்ல பயிற்சியாகும். ஹிந்து மதத்தவர்கள் கையாளுகிற ஜப மாலையில் 108 மணிகள் இருக்கின்றன. அல்லது அதில் பாதி 54 மணிகள் இருக்கின்றன. மணிகள் மிகப் பெரியவைகளாக இருந்தால் 54ல் பாதி 27 எடுத்துக் கொள்வதும் நடை முறையில் இருந்து வருகிறது. இந்த எண்ணிக்கைகளைக் கூட்டினல் மொத்தம் ஒன்பதில் வந்து நிற்கும். தத்துவ விளக்கத்துக்கு ஒன்பது தலை சிறந்ததாக இடம் பெற்றிருக்கிறது. பிரபஞ்ச அமைப்பு சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களிலிருந்து வந்தது. அப்பிரபஞ்சம் கால தேச நிமித்தம் ஆகிய மூன்று பாங்குகளில் தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறது. பிரபஞ்சத்தில் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரமாகிய மூன்று கிருத்தியங்கள் நிகழ்ந்து வருகின்றன. இம்மூன்றும் சேர்ந்து ஒன்பது ஆகிறது. பிரபஞ்சத்துக்கு விளக்கம் இந்த ஒன்பதுக்கு மேல் கிடையாது. ஆதலால் தத்துவ விளக்கத்தில் ஒன்பது முக்கியமான இடம் பெற்றிருக்கிறது. ஒன்பதனுடைய விரிவடைந்த எண்ணிக்கைகளாக இருபத்தேழு ஐம்பத்து நான்கு, நூற்றெட்டு அமைந்திருக்கின்றன. இறைவனுடைய திருநாமத்தை ஜபிப்பதற்கு ஜபமாலை பயன்படுத்தப்படுகிறது. ஒரே நாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பது நாமஜபம் என்னும் பெயர் பெறுகிறது. ஆத்ம சாதனங்களுள் இது மிக மிகச் சுலபமானது. மக்களாகப் பிறந்திருக்கிறவர்கள் யார் வேண்டுமானலும் நாம ஜபத்தில் ஈடுபடலாம். வயது வேற்றுமையோ, பால் வேற்றுமையோ இன வேற்றுமையோ நாம ஜபத்தில் குறுக்கிடுவதில்லை. ஐயப்பன் கோயிலுக்குத் தரிசனத்துக்குப் போகிறவர்கள் ஜபமாலை பூணுதல் என்னும் விரதம் எடுத்துக் கொள்ளுகின்றனர். மாலை பூண்ட நாள் முதற் கொண்டு ஐயப்பன் தரிசனம் பூர்த்தியாகும் நாள்வரை மாலை பூண்டுள்ளவர்கள் கட்டுப்பாடான வாழ்வு வாழ்ந்து வருகிறார்கள். நியமனத்தோடு தினசரி சாதனத்தில் அவர்கள் கருத்தைச் செலுத்துகிறார்கள். மனிதன் ஒருவனுக்குச் சில நாட்கள் கட்டுப்பாடோடு வாழ்ந்திருப்பது சாத்தியமென்றால் ஆயுள் முழுவதிலும் அவன் அங்ஙனம் கட்டுப்பாடோடு வாழ்ந்திருக்கலாம் என்னும் கோட்பாடு வெளியாகிறது. ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான பேர்கள் ஐயப்பனுடைய தரிசனத்திற்காக ஜபமாலையைப் பூண்டு கொண்டு ஒழுங்கான வாழ்க்கை வாழ்ந்து வருவது அரிய பெரிய செயலாகிறது. அவர்கள் எல்லாருமே ஐயப்பன் என அழைக்கப் பெறுகிறார்கள். ஐயப்பனுடைய எண்ணிக்கை ஆண்டுதோறும் அதிவேகம் வளர்ந்து வருவது ஆகுக. அதற்கு ஐயப்பன் யாண்டும் துணைபுரிவானாக.

கொஞ்ச காலத்துக்கு முன்பு ஐயப்பன் வழிபாடு அலாதியாக கேரளத்துக்கு உரியதாக இருந்தது. நாள் ஏற ஏறப் பக்கத்து மாகாணங்களுக்கும் அது பரவுவதாயிற்று. இப்பொழுது அகில பரதகண்டத்தையே தழுவுகிற பாங்கில் அது பரவிக்கொண்டிருக்கிறது. பக்திமார்க்கத்தில் மக்கள் படைத்துள்ள ஆர்வத்துக்கு இது சான்றுகிறது.

**கேள்வி: (151) *பகவத்கீதையில் இரண்டாவது அத்தியாயம் 37-வது சுலோகத்தில் 'கொல்லப்பட்டால் நீ சுவர்க்கம் அடைகின்றாய். வென்றால் உலக போகத்தை அனுபவிக்கிறாய், ஆதலால்***

**போருக்கு எழுந்திரு' என்கிறது. நாக்ஸலைட்டு என்னும் கொள்ளைக்காரர்களுடைய கொள்கையும் இதுவே. அவர்களுடைய போக்குக்குப் பகவத்கீதை ஆதரவு தருகிறது அல்லவா?**

பகவத்கீதையினுடைய போதனையும், நாக்ஸலைட்டினுடைய கொள்கையும் ஒன்றோடொன்று ஒத்திருப்பதாகத் தென்படுகின்றன. ஆனால் மலைக்கும், மடுவுக்கும் இடையிலுள்ள வேற்றுமை இவை இரண்டுக்குமிடையில் அமைந்திருக்கின்றது. நாக்ஸலைட் என்பார் சமூக வாழ்க்கைக்குச் சத்துருக்களாகத் தோன்றி இருக்கின்றனர். அசுர இயல்பு அவர்களுக்குச் சொந்தம். நேர்மையாகப் பாடுபட அவர்கள் ஆயத்தமாயில்லை. பாடுபட்டுப் பிறர் சம்பாதித்துள்ள பொருளைச் சூறையாடுதலில் அவர்கள் கருத்தைச் செலுத்துகின்றனர். மக்களுக்கிடையில் நயவஞ்சகக்காரர்களாக அவர்கள் வாழ்ந்திருக்கின்றனர். தங்களுடைய கீழான பான்மையை அவர்கள் இரகசியமாகப் பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கின்றனர். நேர்மைக்கும் அவர்களுக்கும் வெகுதூரம். அதர்மமே வடிவெடுத்தவர்களாக அவர்கள் இருக்கிறார்கள். சமுதாயத்துக்கு நலன் தருகிற சேவைசெய்யாது நச்சுப்பாம்புகள் போன்று பதுங்கியிருந்து பாதகத்தில் ஈடுபடுகின்றனர்.

கீதையில் இரண்டாவது அத்தியாயம் 37-வது சுலோகம் புகட்டுகிற கொள்கை உலகப் பற்றோடு வாழ்ந்திருக்கின்ற போர் வீரன் ஒருவனுக்கு உரியதாகும். முறையாக நாடாளுகிறவன் அதர்மத்துக்கு எக்காரணத்தைக் கொண்டும் இடம் தரலாகாது. எங்கெல்லாம் அதர்மம் தலையெடுக்கிறதோ அதை அறவே அகற்றித் தள்ளுவது சமுதாய நண்பன் ஒருவனுடைய செயலாகும். துரியோதனனுடைய கூட்டம் அதர்மத்தின் உச்ச நிலையை எட்டியது. எந்த விதத்திலும் அதை எதிர்த்துப் போராட அர்ஜுனன் கடமைப்பட்டிருந்தான். பஞ்சமகாபாதகத்தில் மூழ்கியிருந்த எதிரிகளை ஒழித்துத் தள்ளினால் ராஜ்யசுகம் அவனுக்குச் சொந்தமாகிறது. சிறுமையை எதிர்த்துப் போராடி உயிர் துறந்தால் அவன் வீரியத்திற்கேற்ப வீரசுவர்க்கத்திற்கு உரியவனாகிறான். ஆதலால் தீமையை எதிர்க்க அவன் கடமைப்பட்டிருந்தான் என்பது அந்தச் சுலோகத்தின் உட்கருத்து. அதற்குமேல் கர்மயோகத்தில் நிலைத்திருந்து அதே கர்மத்தைச் செய்தால் அவன் ஆத்மவான் ஆகிறான் என்னும் கோட்பாடு அதைத் தொடர்ந்து வருகிறது. ஆதலால் கீதையின் போதனையும் நாக்ஸலைட்டினுடைய கீழ்மையும் ஒரு பொழுதும் ஒவ்வா.

சாஸ்திரப் பிரமாணத்தைப் பொருத்தமாகக் கையாளுதல் எல்லார்க்கும் சாத்தியமன்று சில வேளைகளில் முரண்படுகிற கருத்துக்களே சாஸ்திரப் பிரமாணங்களாகத் தென்படுகின்றன. எந்தச் சூழ்நிலையில் யாருக்காகச் சாஸ்திரக் கோட்பாடு ஒன்று வடிவெடுத்தது என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். பகவத்கீதையில் ஈண்டு ஆராய்ச்சிக்காகக் கிளம்பியுள்ள கோட்பாடு முக்கியமாக உலகப் பற்றுடையவனுக்கு உரியதாகிறது. உலகப்பற்றுடைத்திருப்பவனும் தர்மத்தினின்று பிசகலாகாது. ஆட்சிபுரிகிறவர்கள் தர்ம யுத்தத்தினின்று எக்காரணத்தை முன்னிட்டும் பின்வாங்கலாகாது. தர்மத்தை நிலைநாட்டுவதற்காகப் போர்புரிகிறவன் வெற்றியைப் பற்றியோ, தோல்வியைப்பற்றியோ கவலைகொள்வதில்லை. தீவிரமாகத் தர்மயுத்தத்தில் ஈடுபடுவதே அவனுடைய கடமை ஆகிறது.

நாக்ஸலைட்ஸ் என்று சொல்லப்படுகிற கொள்ளைக் கூட்டத்தாருக்கும் தர்மத்திற்கும் வெகுதூரம். கல்வி கற்கின்ற ஒருவனுக்குச் சமுதாயம் பொருள் உதவி செய்கிறது; கல்வியையும் வழங்குகிறது. ஆகையால் முறையாகக் கல்வி கற்கிறவன் தன்னைச் சமுதாயத்தின் தொண்டனாக வைத்துக் கொள்ளவேண்டும். தன்னுடைய தனி நலனைப்பற்றிச் சிந்திக்காது தன் ஜீவிதத்தைச் சமுதாய சேவைக்காகவென்றே ஒப்படைக்கவேண்டும். அப்படிச் செய்வது தர்மமாகும். அதற்கு நேர்மாறாகச் சமுதாயம் எப்பொழுதுமே தங்களை ஆதரிக்கவேண்டுமென்று நாக்ஸலைட் கூட்டத்தார் எண்ணுகின்றனர். தக்க போக்கில் தங்களை ஆதரிக்காவிட்டால் பணம்படைத்தவர்களை முறைதவறிய பாங்கில் மாய்த்துவிட அவர்கள் திட்டம் போட்டு அதை நடைமுறைக்கும் கொண்டு வருகின்றனர். அன்னவர்கள்மீது தீவிரமாக நடவடிக்கை எடுப்பது அரசாங்கத்தின் கடமை.

---

# புறநோக்கும் அகநோக்கும்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1974ஆம் ஆண்டு திருவேடகம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

पराञ्चि खानि व्यतृणत् स्वयंभू-स्तस्मात्
पराङ्पश्यति नान्तरात्मन् ।
कश्चिद्धीरः प्रत्यगात्मान-मैक्ष-दावृत्त-
चक्षुरमृतत्व-मिच्छन् ॥

பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வயம்பூஸ்தஸ்மாத்
பராங்பச்யதி நாந்தராத்மன் |
கச்சித்தீர: ப்ரத்யகாத்மான-மைக்ஷதாவ்ருத்த-
சக்ஷுர ம்ருதத்வ-மிச்சன் ||

என்கிறது கடோபநிஷதம்.

பரமேசுவரன் இந்திரியங்களை வெளிநோக்குடையவையாகச் சிருஷ்டித்துள்ளார். ஆகையால் மனிதன் புறப்பொருள்களையே பார்க்கிறான். யாரோ ஒரு தீரன் சாகாநிலையை விரும்பி அவற்றை அடக்கி உள்முகமாய்த் திருப்பப் பெற்ற பார்வையுடையவனாய்ப் பிரத்யகாத்மாவைப் பார்க்கின்றான்.

தானாகத் தோன்றிய பிரம்மா புறத்திலிருப்பவைகளைக்காண்பதற்காகச்சரீரத்தில் இந்திரியங்களைச் சிருஷ்டித்திருக்கிறான். பிரம்மாவின் அம்சமாக இருக்கின்ற ஜீவர்கள் புறத்திலிருப்பவைகளைத்தான் பார்க்கின்றன. இந்திரியங்களைக் கொண்டு அகத்திலிருப்பதைக் காண்பதற்கான சக்தி ஜீவனுக்கோ, பிரம்மாவுக்கோ இல்லை. பக்குவம் அடைந்த யாரோ ஒரு சீடன் அழியாப் பெருநிலை அடைவதற்கு உபாயம் என்ன என்பதை அறியவிரும்பினான். கருவிகரணங்களை வாரியெடுத்து அவன் உள்முகமாக அவைகளைத் திருப்பினான். உள்ளே இருக்கின்ற பிரத்யகாத்மனை அவன் தரிசித்தான். பிரத்யகாத்மனைத் தரிசிப்பதுதான் வாழ்க்கையின் குறிக்கோள். இந்த உபநிஷதத்தைச் சரியாக ஆராய்ச்சி செய்தால் நம் வாழ்க்கையின் குறிக்கோள் எது? நாம் என்ன பாங்கில் பரிணமித்து வருகின்றோம்? இலட்சியத்தை அடைவதற்குரிய உபாயம் எது? என்னும் விஷயங்கள் தெளிவாகின்றன.

ஸ்வயம்பூ என்னும் பதத்தை முதலில் ஆராய்வோம். ஸ்வயம்பூ என்றால் தானாகத் தோன்றியது என்பது பொருள். பிரளய காலத்தில் பிரம்மதேவன் இல்லை. சிருஷ்டியின் துவக்கத்தில் மகாவிஷ்ணுவின் உந்திக் கமலத்திலிருந்து பிரம்மதேவன் தோன்றி வந்தான். அவன் புறத்தே பார்க்க ஆரம்பித்தான்.

நான்கு திசைகளையும் பார்ப்பதற்கு நான்கு முகங்களைக் கொண்ட சதுர்முக பிரம்மாவாகத் தோன்றினான். பிரம்மதேவன் புறத்தைக் காணவல்லவனாக இருக்கின்றான். புறத்தில் தென்படுவது பிரபஞ்சம். பிரம்மதேவன் பிரபஞ்சத்தைச் சிருஷ்டி செய்தான். ஜீவர்களாகிய நமக்கும் ஸ்வயம்பூ என்னும் பதம் பொருந்தும். ஜீவர்களும் தாமாகத் தோன்றியவர்கள் ஆவார்கள். ஜீவர்களின் தொகையே பிரம்மதேவன் ஆகின்றான். சமுத்திரத்தின் மேல்மட்டத்தில் இருக்கின்ற அலைகளின் தொகையைக் கட்புலன் ஆகின்ற கடல் என்று சொன்னால் அது பொருந்தும். கட்புலன் ஆகாத கடல் பகுதி இருக்கிறது. ஜீவாத்மா, வியஷ்டி ஆகும். ஜீவாத்மாக்களைத் தொகுத்துச் சமஷ்டியாகப் பார்க்குமிடத்துச் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவன் ஆகின்றான். ஜீவாத்மா அலைக்கு நிகர் ஆகின்றது. சமுத்திரத்தில் அலை தானாகத் தோன்றி உருண்டோடி கரையில் மோதி இறுதியில் தன் வியக்தியை இழக்கின்றது. அங்ஙனம் ஒவ்வொரு ஜீவாத்மாவும் தானாகத் தோன்றுகிறான். தோற்றம் எப்படி எந்தப் பாங்கில் அமைந்தது என்பதை அறிவது அரிது. ஆகையால் ஜீவனுடைய துவக்கத்தைத் தீர்க்கதரிசிகள் யாரும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் துவக்கம் இருக்கிறது என்பதை யூகத்தால் அறியலாம். ஜீவபோதத்துக்கு முடிவு இருப்பதால் அதற்குத் துவக்கமும் இருந்தாக வேண்டும். புத்தர் பழைய ஜன்மங்களை ஞாபகப்படுத்திப் பார்த்தபொழுது அவருக்கு ஐந்நூறு ஜன்மங்கள் ஞாபகத்துக்கு வந்தன. அதற்கப்பால் அவருக்குக் கட்புலனாகவில்லை. மலை உச்சியிலிருந்து சமவெளியைப் பார்த்தால் அது நெடுந்தூரம் கண்ணுக்குத் தெரியும். பிறகு தென்படாது மறைகிறது. இயற்கையில் உண்டாகும் மாறுதலை ஆராய்ந்து பார்ப்போம். ஜடமாக

இருப்பவை சேதனமாகமாறி அமைந்துகொண்டிருக்கின்றன. மண்ணில் உயிர்ச் சக்தி இருக்கும் பொழுது அது சாகுபடிக்கு உதவுகிறது. பாலைவனம் போன்று வெறும் மணலாக இருக்கும் பொழுது அது சாகுபடிக்கு உதவுவதில்லை. சாகுபடிக்கு ஏற்றதாக அது மாறி அமைகின்ற பொழுது பேக்டீரியா என்னும் உயிர்த்தத்துவம் அதில் தோன்றி வருகிறது. ஆனால் அது ஜீவவியக்தி என்று பொருட்படுத்த முடியாத நிலையில் இருக்கிறது. அதனிடத்துத் தாவரம் வளர்கிறது. தாவரநிலையிலும் ஜீவவியக்தி சரியாக அமைவதில்லை. அதற்கு ஆலமரத்தைச் சான்றாக எடுத்துக் கொள்ளலாம். ஆலமரத்தை ஐம்பது துண்டுகளாக நறுக்கிப் பூமியில் நட்டால் அவை ஐம்பது ஆலமரங்களாக வளரும். எனவே ஆலமரத்தில் உயிர்த்தத்துவம் இருக்கிறது. ஆனால் அதற்கு ஜீவவியக்தி இல்லை. ஜீவவியக்தி எப்பொழுது வருகிறது என்பதைக் கண்டுபிடிக்க முடிவதில்லை. கடலினுள் உயிர்கள் சிலவற்றை இரண்டாகத்துண்டித்துப்போட்டால் இரண்டு உயிர்களாக ஓடுகின்றன. தாவரத்தில் இருப்பது ஜங்கமத்திலும் அமைந்திருக்கிறது. இன்பதுன்பத்தை அறியும் மனோதத்துவம் வரும் பொழுது ஜீவவியக்தி வடிவெடுக்கிறது. நாம் கொசு ஒன்றை அடிக்கப்போகும் பொழுது அது பறந்து விடுகிறது. அது தன் உயிர்க்கு ஆபத்து என்று தெரிந்து ஓடுகிறது. அந்த அளவுக்கு அதனிடம் மனோதத்துவம் வந்திருக்கிறது. உயிர்கள் படிப்படியாகப் பரிணமித்து மானுடநிலைக்கு வருகிற பொழுது ஜீவவியக்தி உச்சநிலைக்கு வருகிறது. சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிப்பது இயற்கையின் திட்டம்.

புறத்திலிருப்பதைக் காண்பதற்காக உயிர்கள் தோன்றி வருகின்றன. பூமிக்கடியில் இருக்கும் புறப்பொருளைக்காண்பதற்குத் தாவரம் வேரைப் பூமிக்குள் அனுப்புகிறது. தாவரம் தன் கிளைகளை வெட்ட வெளியில் அனுப்புகிறது. தாவரத்தினிடத்து ஸ்பரிச உணர்ச்சி இருக்கின்றது. ஒவ்வொரு இந்திரியமாக அதிகரித்து ஐந்து இந்திரியங்களோடு கூடியவைகளாகப் பறவைகளும் விலங்குகளும் இருக்கின்றன. ஐந்து இந்திரியங்களோடு பகுத்தறிவும்சேருகிறபொழுது மனிதன் ஆகின்றான். ஜீவர்கள் யாவரும் ஸ்வயம்பூ என்னும் பெயர் பெறுகின்றனர். உயிர்களுக்கெல்லாம் சிருஷ்டிகர்த்தாவாகப் பிரம்மதேவன் இருக்கின்றான். அவன் முறையாகச் சிருஷ்டியை நடாத்தி வருகின்றான். அவனும் ஜீவாத்மாவாக இருந்து பிரபஞ்சத்தைக் கண்டுவருகிறான்.

இந்திரியங்கள் யாவும் புறத்தில் செல்வதாக அமைந்திருக்கின்றன. உள்முகமாக நோக்கிச் செல்வதற்கு அவைகள் உதவமாட்டா. தியான வேளையில் ஐந்து இந்திரியங்களை ஒதுக்கிவிட்டு அந்தக்கரணத்தை உள்ளே இழுத்துச் செல்ல முயல்கின்றோம். மனிதனுக்குத்தான் இச்செயல் சாத்தியமாகும். மனதை உள்ளே இழுத்துச் செல்வதன் மூலம் மனிதன் தன்னை ஆத்ம தரிசனத்துக்குத் தயார் செய்கின்றான். மனித ஜன்மத்துக்கு முன் எடுத்த ஜன்மங்களிலெல்லாம் இந்திரியங்கள் மூலமாகப் புற உலகுக்குச் சென்று பழகுவது ஜீவனுக்குச் சாத்தியமாக இருந்தது.

"சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தின் வகை தெரிவான் கட்டே உலகு" என்பது குறள். பஞ்சேந்திரியங்களின் மூலமாகப் புற உலகம் புலப்படுத்தப்படுகிறது. ஐம்பொறிகள்மூலம் வெளி உலகில் அறியப்படுபவை ஏகதேசம்தான் அறியப்படுகின்றன. புற உலகில் இருந்துவரும் விஷயங்கள் நம் ஜீவிதத்துக்கு முற்றிலும் உகந்தவைகள் அல்ல. பகுத்தறிவைக்கொண்டு ஆராய்ந்தால் அவ்வுண்மை விளங்கும். கண்கொண்டு காண்பவைகள் சில மகிழ்ச்சிக்குரியவைகளாக இருக்கின்றன. இன்னும் சில துன்பத்துக்குரியவைகளாக இருக்கின்றன. கோயிலில் தெய்வத்துக்கு அலங்காரம் செய்து கண்களால் காண்கின்றோம். அக்காட்சி மகிழ்ச்சிக்குரியதாகிறது. போர்க்களத்தில் உயிர்களைக் கொல்லும் கோரக்காட்சியைக் காண்கின்றோம். அது துக்கத்துக்குரிய காட்சியாகஇருக்கிறது. காதுகொண்டு கேட்பவைகள் சில மகிழ்ச்சிக்குரியவைகளாகவும், இன்னும் சில துக்கத்துக்குரியவைகளாகவும் இருக்கின்றன. பிறப்புச் செய்தியைக் கேட்கும் பொழுது மகிழ்ச்சி அடைகிறோம்; மரணச் செய்தியைக் கேட்கும் பொழுது துக்கம் அடைகிறோம். இங்ஙனம் ஐம்பொறிகள் மூலம் வருகின்ற செய்திகள்

யாவும் இன்ப துன்பம் கலந்தவையாக இருக்கின்றன. துன்பம் கலவாத இன்பம் இப்பிரபஞ்சத்தில் இல்லை. சிற்றுயிர் பேருயிர் ஆகிய எல்லா ஜீவர்களும் துன்பம் கலவாத இன்பத்தையே நாடுகின்றன. ஆனால் அவ் இன்பம் பிரபஞ்சத்தில் கிடைப்பது இல்லை. ஆரம்பத்தில் அது கிடைப்பது போன்று தோன்றி இறுதியில் ஏமாற்றத்தை உண்டுபண்ணுகிறது. எத்தனையோ ஜன்மங்களில் இவ் ஆராய்ச்சியைச் செய்து பார்த்திருக்கிறோம். இன்னும் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறோம். வாழ்க்கை பிறப்பென்னும் மகிழ்ச்சியில் துவங்கி மரணம் என்னும் துன்பத்தில் முடிகிறது. ஆரோக்கியமான மகிழ்ச்சிக்குரிய வாழ்வு நோய்வாய்ப்படுதல் என்னும் துன்பத்தில் முடிகிறது. பிரபஞ்ச வாழ்வு இப்படி இன்ப துன்பமயமாகத்தான் அமைந்திருக்கிறது. இதைத் திருத்தியமைப்பதற்குப் பெரிய பெரிய மதாசாரியர்கள் வந்திருக்கிறார்கள். ஆனால் உலகம் அதே போக்கில்தான் அமைந்திருக்கிறது. அதன் போக்கை அறவே மாற்றியமைக்க முடியவில்லை. ஒரு காலத்தில் உலகில் இன்ப துன்பம் இரண்டும் சமமாக அமைந்திருக்கலாம். இன்னொரு காலத்தில் துன்பம் அதிகமாக இருக்கலாம். இன்னுமொரு காலத்தில் இன்பம் அதிகமாக இருக்கலாம். ஆனால் ஏதோ ஒரு விதத்தில் இந்த உலகத்தில் இன்ப துன்பம் கலந்துதான் இருக்கிறது. இவ்வுலகத்துக்கு அப்பால் ஒன்றுமில்லையா? இதைவிட உயர்ந்த நிலை இல்லையா? இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றவன் தீரன் ஆகின்றான்.

தீரன் ஒருவன் உலகை உள்ளபடி ஆராய்ந்து பார்க்கிறான். இவ்வுலகம் மேல் நிலையில் பரவஸ்துவாக இருக்கிறது என்பதையும், உலகமாக இருக்கும் நிலையில் குறைநிலையுடையதாக இருக்கிறது என்பதையும் தீரன் அறிகின்றான். நிறை நிலை உடைய பொருள் இவ்வுலகில் உண்டா என்பதைத் தேடிப் பார்க்கின்றான். புத்தருக்குப் பிள்ளைத் திருநாமம் சித்தார்த்தன். அவர் சிறு பிள்ளையாக இருந்தபொழுது, அவருடைய தந்தையார் அவரை ஒரு பாறையில் உட்காரவைத்துவிட்டு விதை விதைத்தல் என்னும் செயலில் ஈடுபட்டிருந்தார். பாறைமீது ஊர்ந்து சென்ற பல்லி ஒன்று சிறு பூச்சிகளைப் பிடித்தது. அப்பல்லியைக் கோழி ஒன்று பிடித்துச் சாப்பிட்டது. ஆகாயத்தில் பறந்து சென்ற பருந்து ஒன்று அக்கோழியைத் தூக்கிப் போய்ச் சாப்பிட்டது. அப்பருந்தை வேடன் ஒருவன் அம்பால் அடிக்க அது செத்து விழுந்தது. அக்காட்சியைக் கண்ட சிறுவனாக விருந்த புத்தர் ஆழ்ந்து சிந்திக்கலானார். அவர் சிந்தித்ததாவது: "வாழ்க்கை இதுதானா? மண்ணிலுள்ள பேக்டீரியாவைத் தின்று செடி வளர்கிறது. செடியைத் தின்று ஜங்கமங்கள் வாழ்கின்றன. ஜங்கமங்கள் ஒன்றை ஒன்று கொன்று தின்று வாழ்கின்றன. எண்ணெய் இல்லாது எப்படித் தீபம் எரியாதோ அப்படி மற்ற உயிர்களை மாய்க்காது உயிர் வாழ முடியாது. தாவரத்திடமும் உயிர்த்தத்துவம் இருக்கிறது. தாவர உணவை உண்பவைகளும் உயிரை மாய்ப்பவையாகின்றன. எனவே ஒருயிர் மற்ற உயிரைத் தின்று வாழ்ந்து வருகிறது." சிறுவனாகிய புத்தர் இங்ஙனம் எண்ணினார். ஆனால் நாம் இதை எண்ணிப் பார்ப்பதில்லை. புத்தர் பின்னால் துறவுபூண்டதற்கு இதுவும் தூண்டுதலாக இருந்தது.

இராமன் பதினைந்து வயதிற்குள் கல்வி கற்று விட்டுத் தந்தையிடம் அனுமதி வாங்கிக் கொண்டு தீர்த்த யாத்திரையாகப் போய் உலகையெல்லாம் பார்த்து வந்தார். சிந்தனை நிறைந்தவராகத் திரும்பினார். உலகத்தில் முரண்பாடு இருந்ததைக் கண்டார். அதைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டவராக இருந்தார். இராமனிடம் "உன்முகத்தில் விசனக்குறி தென்படுகிறது. இராஜ்யம், ஆயுள், ஆரோக்கியம், சம்பத் எல்லாம் பரிபூரணமாக இருக்கும் பொழுது வியாகூலப்பட்டவன் போன்று ஏன் தென்படுகின்றாய்?" என்று கேட்கப்பட்டது. இராமன் பகர்ந்ததாவது: "இந்தச் சரீரம் ஓயாது தேய்ந்துகொண்டிருக்கிறது. அப்படித் தேய்வதை நான் பார்க்கிறேன். ஒரு நாளைக்கு அது மடியும். அதையும் நான் அறிகின்றேன். இன்புற்றிருப்பது துன்பத்திற்கு உள்ளாகிறது. அதையும் நான் காண்கின்றேன். இவ்வுலகம் வாழ்க்கைக்குத் தகுதியான இடமா என்னும் யோசனையில் நான் இருக்கின்றேன்." அந்த மனநிலை வந்தபொழுது

வசிஷ்டர் இராமனுக்குப் பாரமார்த்திக தத்துவத்தையெல்லாம் எடுத்துப் பகரலானர். "உலகத்தின் தன்மை இத்தகையது தான். இதனை அறிந்து உலகில் தீவிரமாகக் கடமையைச் செய்வதற்கிடையில் உலகத்தில் கட்டுப்படாமல் இருப்பவன் எவனே அவன்தான் அதீதத்துக்குப் போக வல்லவன்" என்று வசிஷ்டர் கூறினர். இக்கருத்தை நமக்கு விளங்குகின்ற மொழியில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளதாவது: "மானுடர்களாக நாம் பிறந்திருப்பது கடவுள் வழிபாட்டுக்காக" என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். நாம் செய்வதையெல்லாம் மற்ற ஜீவர்களும் செய்கின்றன. குடியிருப்பதற்குப் பெரிய மாளிகை கட்டுகின்றோம். பறவையொன்று தான் குடியிருப்பதற்கு அற்புதமான கூடு ஒன்றைத் தன் அலகைக்கொண்டு கட்டுகிறது. அது கட்டுவதற்கு நிகரான கூட்டை நாம் ஒரு நாளும் அமைக்கமுடியாது. தேனீ கட்டுகின்ற கூடு தேன் வழிந்துபோகாது இருக்கும்படி அமைந்திருக்கிறது. பூமிக்கடியில் எறும்பு அற்புதமான வளைகட்டுகிறது. இவையாவும் தங்களுடைய எஞ்சினியரிங் திறமையைக் காட்டுகின்றன. இன்பத்தை நாடி மனிதன் ஏதேதோ செய்கின்றான்.

சிற்றுயிர்கள் அடையும் இன்பத்தை மனிதன் ஒருநாளும் அடையமுடியாது. மனிதனுக்குக் கவலை அதிகம். இன்பம் மிகக் குறைவு. ஆனல் சிற்றுயிர்களுக்குத் துன்பம் மிகக் குறைவு. இன்பம் அதிகம். நாம் இதை ஆராய்ந்து பார்ப்பதில்லை. சிற்றுயிர்களோ கவலையற்று வாழ்ந்து வருகின்றன. ஆனல் மனிதன் பிறந்தது முதல் சாகும் வரை கவலை சொருபமாக இருக்கின்றான். இராமனும், புத்தனும் இதை எண்ணிப் பார்த்தார்கள். அவர்கள் பெருநிலைக்குச் சென்றார்கள். அவர்களைப் பின்பற்ற நாம் கடமைப்பட்டிருக்கிறோம். மனிதனுடைய போக்கு எத்தகையது தெரியுமா? கொடிய விலங்குகள் வாழும் வனத்தில் மனிதன் ஒருவன் நடந்துசென்றான். அப்பொழுது புலி ஒன்றைச் சந்தித்தான். அதனிடமிருந்து தப்புவதற்கு அவன் வேகமாக ஓடினன். தரையில் புல் மூடியிருந்ததால் பாழுங்கிணறு ஒன்றில் தெரியாது காலை வைத்து விழப்போனன். அப்பொழுது அங்கிருந்த மரத்திலிருந்து தொங்கிக்கொண்டிருந்த கொடியை உறுதியாகப் பிடித்துக் கிணற்றுக்குள் விழாது தன்னைப் பாதுகாத்துக் கொண்டான். அவன் பிடித்த கொடி சிறிது சிறிதாக அறுபட்டுக்கொண்டிருந்தது. எனவே அவன் சிறிது சிறிதாகக் கீழே இறங்கினன். கிணற்றின் கீழ்ப்பகுதியில் நாகசர்ப்பம் ஒன்று படமெடுத்து ஆடிக்கொண்டிருந்தது. கீழே போனல் அது கொத்த ஆயத்தமாக இருந்தது. கிணற்றின் மேலே புலி அவனை அடிப்பதற்காகக் காத்துக்கொண்டிருந்தது. அதற்கிடையில் அவன் கொடியைப் பிடித்த வேகத்தில் மரத்திலிருந்த தேன் கூடு கலைக்கப்பட்டு அதிலிருந்த தேனீக்கள் அவனை வந்து கொட்டித் துன்புறுத்தின. இத்தகைய துன்பச் சூழ்நிலைக்கிடையில் கலைக்கப்பட்ட தேன் கூட்டிலிருந்து சொட்டுச் சொட்டாக விழுந்துகொண்டிருந்த தேனை நாக்கினல் நக்கிச் சுவைத்தான். நம்முடைய உலக இன்பமும் இத்தகையது. தாற்காலிகமாகக் கிடைக்கும் இன்பத்தை நிரந்தர இன்பமாகக் கருதுகின்றோம். கடவுள் வழிபாடு செய்யவேண்டும். உலகத்தில் வாழ்ந்திருக்கும் பொழுது கடவுளை நாடி இருக்கின்ற அளவு உலகப் பிரச்னை குறைகின்றது. கடவுள் தத்துவத்தைப் புத்தி பூர்வமாக அறியுமிடத்துப் பிரச்னைகள் நம்மை எட்டுவதில்லை. ராமன் அந்தநிலையிலிருந்து வாழ்க்கையை முறையாக நடாத்தினர். புத்தர் துறவியாகச் சென்று துறவு நிலையில் எத்தகைய உயர்ந்த நிலையை அடையலாம் என்பதைக் காட்டித்தந்தார்.

உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருந்ததற்கிடையில் ராமன் அதில் சம்பந்தப்படாது இருந்தார். ஆகையினல் உலக வாழ்க்கையை நன்கு நடாத்தமுடிந்தது. இவ்வுலக வாழ்க்கை வாழ்ந்ததற்கிடையில் இவ்வுலகத்திற்கு அப்பால் உள்ள நிலையில் அவர் கண்ணும் கருத்துமாக இருந்தார். அதற்காக அவர் இவ்வுலகில் தம்மை ஆயத்தப்படுத்தினர். அவர் அடைந்திருந்த மனநிலையை நாமும் பெற்றாக வேண்டும். அம் மனநிலையைப் பெற்றுவிட்டால் இவ்வுலகத் துன்பத்துயரங்களில் பாதிக்கப்படாதவர்களாக இருந்துகொண்டு இவ்வுலகை நன்கு பயன்படுத்தலாம். பரமஹம்சர் பகர்வ

தாவது: ''சேற்றில் தோன்றி சேற்றில் விருத்தி அடைந்து வருகின்ற சேற்றுமீன் போன்று இவ்வுலகத்தில் வசிக்கத் தெரிந்து கொள். சேற்றுமீன் சேற்றுக்குள் இருந்தாலும் சேறு அதன் மீது படிவதில்லை. அது போன்று துன்பமும் தீமையும் நிறைந்த உலகில் நீ இருப்பதற்கிடையில் அவற்றில் கட்டுப்படாது இருக்கக் கற்றுக்கொள். உலகில் கட்டுப்படாது உலகைப் பயன்படுத்துவதற் கேற்ற அளவு நீ பெரிய நிலைக்கு வரலாம்.'' கடவுள் வழிபாடு இதில் அமைந்திருக்கிறது. கடவுள் தத்துவத்தை அறிகின்றவன் தான் கடவுளுக்குரியவன் ஆகின்றான். நீ உலகத்துக்குரியவன் அல்லன் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு உலகைப் பயன்படுத்தி வா. அப்பொழுது உலகத்தில் உள்ள துன்பங்களால் நீ பாதிக்கப்படமாட்டாய். இவ்வுண்மையை அறிந்து கொள்கின்றவன் அதாவது உலகில் இன்பத்தைவிடத் துன்பம் அதிகமாக இருக்கிறது என்பதை அறிந்து கொள்கின்றவன் தீரன் ஆகின்றான். துன்பத்திலும் இன்பத்திலும் கட்டுப்படாது பிரபஞ்சத்தில் வாழ்வாங்கு வாழ்கின்றவன் தீரன் ஆகின்றான். உலக நாட்டத்தைவிடக் கடவுள் நாட்டம் அதிகம் கொணடிருப்பவன் தீரன் ஆகின்றான். நாம் தீரர்கள் ஆகவேண்டும். உலகில் கட்டுப்படாது இருக்கவேண்டும். தத்துவத்தை அறிகின்ற பொழுதுதான் தீரர்களாக வாழமுடியும்.

இன்று மகிழ்ந்திருப்பவனுக்கு நாளை கதறிப் பதறி அழுகின்ற சூழ்நிலை வரலாம். மகிழ்ச்சியையும், அழுகையையும் சமனாகப் பாராட்டுபவர்கள்தாம் உள்ளத்தைப் பக்குவப்படுத்துபவர்கள் ஆகிறார்கள். அவர்களே இவ்வுலகில் வாழத் தகுதியுடையவர்கள் ஆகிறார்கள். இவ்வுலக வாழ்வு வேண்டாம் என்று ஒதுங்கி ஒன்றுக்கும் உதவாதவர்களாக இருப்பவர்கள் வாழ்கைத் தத்துவம் தெரிந்தவர்கள் அல்லர். உலகப் பற்று நிறைந்தவர்களாக நாம் இருக்கின்றோம். உலகப்பற்று ஜன்மாந்திர வாசனையின் விளைவாக நம்மிடம் வந்துள்ளது. அதைக் குறைத்துத் தெய்வப்பற்றைவளர்க்கவேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளதாவது: ''தெய்வப் பற்றையும், உலகப் பற்றையும் தராசின் இரண்டு தட்டுகளில் வைத்து எடைபோட்டுப் பார்த்தால் தெய்வப்பற்று ஐம்பத்தொரு பங்கும், உலகப்பற்று நாற்பத்தொன்பது பங்கும் இருக்குமானால் அது உனக்குக் கடைசி ஜன்மம் ஆகும்.'' இங்ஙனம் உலகப் பற்று நம்மிடம் நாற்பத்தொன்பது பங்கு இருப்பதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் அனுமதி கொடுத்திருக்கிறார். உலகப் பற்றை அடியோடு விட்டுவிட வேண்டும் என்று கூறாமல் நமக்குச் சலுகையும் தந்திருக்கிறார். தெய்வப்பற்றை அதிகரிக்கவும், உலகப் பற்றைக் குறைக்கவும் நாம் சாதனை செய்தால் இக்கலியுகத்தில்முக்தியைப் பெற்று விடலாம்.

பந்த பாசத்தில் அகப்பட்டுக் கொள்வது வாழ்க்கையின் நோக்கம் அன்று. வாழ்வாங்கு வாழ்ந்தால் அகப்பற்றுப் போய்விடும். அகப்பற்றுப் போய்விட்டால் புறத்தில் செயல்கள் நன்கு நிகழ்கின்றன. பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் இக்கோட்பாட்டை ''யோக: கர்மசு கௌசலம்'' என்று பகர்கிறார். எடுத்துக் கொண்ட கர்மத்தைத் திறம்படச் செய்கின்றவனே யோகியாகின்றான். கர்மத்தில் அவன் சிறிதும் கட்டுண்டு போவதில்லை. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். அறுவை சிகிச்சையை டாக்டர் கவலைப்படாது திறம்படச் செய்து முடிக்கின்றார். அப்படித் திறமையாகச் செய்தும் நோயாளி இறந்துபோய் விட்டால் அது டாக்டருடைய குற்றமன்று. அறுவை சிகிச்சையைச் சரியாகச் செய்யாது நோயாளி பிழைத்தாலும் அதற்கு டாக்டருக்குத் தண்டனை உண்டு. இங்கிலாந்தில் டாக்டர் ஒருவர் நோயாளி ஒருவனுக்கு அறுவை சிகிச்சை செய்தார். அந்த நோயாளியின் உடலில் கத்தரிக்கோல் ஒன்று இருந்தது. முன்பு அவனுக்கு அறுவை சிகிச்சை செய்த டாக்டர் அவன் உடலில் கத்தரிக்கோல் இருந்ததற்குக் காரணமாக இருந்தார். எனவே அந்த டாக்டர் யார் என்பதைக் கண்டுபிடித்து அவருக்குத் தண்டனை கொடுத்தார்கள். திறம்பட அறுவை சிகிச்சை செய்கின்ற டாக்டர் தம் மகனுக்கு மற்றொரு டாக்டரைக்கொண்டுதான் அறுவை சிகிச்சை செய்வார். தம் மகன் என்ற பற்றுதல் வரும்பொழுது அவர்தம் கடமையைச் சரியாகச் செய்ய முடிவதில்லை. உலகப்பற்று நீங்கியவர்கள்தாம் அரிய செயலைச் செய்யமுடியும். (தொடரும்)

# நன்றிமறவேல்

(சுவாமி துருவானந்தர்)

அன்பையும் அறிவையும் கலந்து கொடுத்து, என்னை ஓர் அறிஞனாக்க விரும்பி அல்லும் பகலும் பாடுபட்ட ஆசிரியப் பெருந்தகையே, உங்களின் திருவடிகளில் அனந்தங்கோடி நமஸ்காரங்களை அர்ப்பணிக்கின்றேன்.

பழைய மாணவன் இராமன்தான் நான் என்று வெறுமனே கூறினால் புரிந்துகொள்ள உங்களால் முடியாது. ஆண்டுகள் இருபது கடந்து விட்டதால், அடியேனின் வரலாற்றை எடுத்து இயம்பினால்தான் நான் யார் என்பதை எளிதில் புரிந்துகொள்ளுவீர்கள். சாமானியமான புழு ஒன்று, கூட்டில் அடைபட்டுத் தன்னைப் பக்குவப்படுத்துகிறது. வளர்ச்சியடைந்தானவுடன் அழகியவண்ணத்துப் பூச்சியாக வெளியேறி நம்மை மகிழ்ச்சிக் கடலில் திளைக்கச் செய்கிறது. எளிய வேலைக்காரிக்குப் பிள்ளையாகப் பிறந்த நான் என் அன்னையின் அருளாலும், தங்களின் ஆசியாலும் எங்ஙனம் முன்னேறிப் பல்லோருக்கும் பயன்படும்படியாக வாழுகிறேன் என்பதை இந்தக் கடிதத்தில் உரைக்கிறேன்.

இருபது ஆண்டுகளுக்கு முன்பு கண்ணனூர் என்னும் கிராமத்தை விட்டு நானும் என் பெற்றோரும் பிழைக்க வழிதேடி நீங்கள் இருக்கும் மதுராபுரிக்கு வந்தது ஞாபகமிருக்கும் என எண்ணுகிறேன். தந்தைக்குப் புரோகிதத் தொழிலைத் தவிர வேறுவேலை செய்து பழக்கமில்லை. உங்கள் ஊர்த் தலைவரின் உதவியால் என் தந்தை அம்மன் கோயிலுக்கு அர்ச்சகராக நியமிக்கப்பட்டார். என் தந்தை முற்றிலும் இலௌகிக மனப்பான்மையில் ஊறியவர். கூலிக்காகவேண்டி அர்ச்சகராகப் பணியாற்றினாரே ஒழிய ஆத்மார்த்தமாக அப்பணியைச் செய்யவேண்டுமென்ற நோக்கம் கிடையாது. சூதாட்டப் பிரியர். அவருடைய நண்பர்களான வேறுசில அர்ச்சகர்களோடு சீட்டு விளையாடுவதில் மூழ்கிவிடுவார். அதில் மனம் ஒன்றித்து விட்டால் கோயிலுக்குச் சென்று பூஜை பண்ணவேண்டும் என்ற எண்ணமிருக்காது. சிறுவனான என்னை அனுப்பி அவருக்கு வீட்டைப்பற்றிய ஞாபகத்தை ஊட்டுவித்து வரும்படி செய்வாள் அன்னை. வெற்றிலை, புகையிலையில்லாது அவருடைய வாய் காலியாக இராது. சதா வாயில் புகையிலையைக் குதப்பிக்கொண்டேயிருப்பார். அதோடுதான் பூஜை செய்வது, அர்ச்சனை, ஆரதிபண்ணுவது அனைத்தும் நடக்கும். கடனைக் கழிப்பது போன்று கனவேகத்தில் மந்த்ரங்களைச் சொல்லுவார். ஆனால் கண்ணும் கருத்தும் கோயிலுக்கு வருபவர், செல்லுபவர் மீது இருக்கும். விபூதி தட்டில் பணம் எவ்வளவு போடுகிறார்கள் என்பதைக் கவனித்துக் கொண்டும் இருக்கும். கோயிலுக்கு வழிபாடு பண்ண வருகிறவர்களிடம் குடும்பக்கதைகளைப் பேசி வீண் பொழுதைக் கழிப்பார். பேசுவதற்கு ஒருவரும் அகப்படவில்லை யென்றால் அடுத்த தெரு ஐயர் கடையிலிருந்து வார இதழ், மாத இதழ், தினசரி இதழ்கள் முதலியவற்றை எடுத்து வந்து கோயிலிலே அரசியல் ஆரவாரங்களைக் கிளப்பிவிடுவார்.

கோயிலுக்குப் பக்தர்கள் எதற்காகப் போகிறார்கள்? தங்கள் கஷ்டத்தை இறைவனிடம் சொல்லிப் பிரார்த்தித்துச் சாந்தி பெற்றுவரத் தானே செல்லுகிறார்கள். அருளுக்கு உறைவிடமாயிருக்கவேண்டிய அர்ச்சகர் ஆபாசத்திற்கு உறைவிடமாயிருந்தால் யார் கோயிலுக்குப் போவார்கள்? அர்ச்சகர்கள் தங்களுடைய ஆழ்ந்த தெய்விக எண்ணத்தினாலேயே கோயிலில் தெய்விக சாந்நித்தியத்தை ஊட்டமுடியும். அவ்வாறு இல்லாது அருளை மறந்து பொருளைப் பறிப்பதில் ஒரே கண்ணுயிருந்ததால்தான் கோயிலுக்குப் போகும் கூட்டம் நாளுக்கு நாள் குறையலாயிற்று. அதன் விளைவாக நாஸ்திகர் கூட்டமும் பெருகலாயிற்று. தகுந்த நல்ல அர்ச்சகர் ஒருவர் அமையும்வரை அவரை வைத்துச் சிறிது காலத்தை ஓட்டலாம் என்று ஆலய நிர்வாகிகள் கருதினர். என் அன்னை எழுதப்படிக்க மட்டுமே தெரிந்தவர். எதையும் கிரஹிக்கும் ஆற்றல் உடையவர். தெய்வபக்தி மிகுந்தவர். பிற ஆடவருடனே, மகளிருடனே அதிகமாகப் பேச்சு வார்த்தை வைத்துக்கொள்ள மாட்டார். தம்முடைய

வேலையிலேயே ஒரே குறியாக இருப்பவர். அத்தகைய அன்னை தந்தையைத் திருத்தி யமைக்க எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. சுயபுத்திவேண்டும், இல்லையென்றால் சொல் புத்தி வேண்டும். இரண்டுமில்லாது கெட் டுப் போகிறவர்களால் குலமும் கெடுகிறது; குடும்பமும் அழிகிறது. புகையிலையை உப யோகிப்பவர்களுக்குப் புற்றுநோய் வரும் என் பது மருத்துவ உலகம் விடுக்கிற எச்சரிக்கை. புகையிலைக்கு அடிமையான தந்தையும் புற்று நோய்க்குப் பலியானார். இதைச் சற்றும் எதிர் பாராத அன்னை அவரின் பிரிவால் உயிர்வாழ மறுத்தாள்.என்எதிர்கால வாழ்வின்பொருட்டு உயிர் வாழ்ந்தாள். இந்நிலையில் உங்களின் தொடர்பு எங்களுக்குக் கிடைத்தது. எங்கள் குடும்ப நிலையை என் தாயிடம் கேட்டறிந்தீர் கள். தினமும் ஒருவேளை உணவு உங்கள் வீட்டில் எனக்கு ஏற்பாடானது. ஏழையாக இருந்த நான் எப்படியாவது நன்கு படித்து முன்னேறவேண்டும் என்றே எண்ணி வந்தீர் கள். என் வாழ்க்கையின் திருப்பத்திற்கே ஒரு சம்பவம் காரணமாக இருந்தது. கடும் உழைப் பால் என் தாய் நோய்வாய்ப்பட்டாள். தாயை உடனிருந்து கவனிக்கும் பொறுப்பு எனக்குண் டல்லவா? இதன் காரணமாக இரண்டு நாட் கள் நான் பள்ளிக்குச் செல்லவில்லை. தமிழ் ஆசிரியர் 'பக்த மார்க்கண்டேயன்' வரலாற்றை அந்த இரண்டு நாட்களிலும் நடத்தியிருந்தார். நான் பள்ளிக்குச் சென்ற தினத்தன்று கேள்வி ஒன்று கேட்டார். நேற்று நடத்திய கதையின் மூலம் நீங்கள் அறிந்துகொண்ட நீதி என்ன?" என்றார். கதை தெரிந்ததால் அனைவரும் விடை கூறவிழைந்தனர்.இரண்டுநாட்கள் பள்ளிக்குச் செல்லாததால் என்ன கதை என்று தெரியாமல் நான் விழித்தேன். என்னைக்கேட்டார்ஆசிரியர். தயங்கி நின்றேன். 'ஒன்றும் தெரியாத மூடன். நீ பள்ளிக்கு வருவதற்குப் பதிலாக எங்கே யாவது மாடுமேய்க்கப் போகலாமல்லவா? என்று எரிந்து விழுந்து தெரிந்தவன் ஒருவன் சொல்'என்று கூறினர். 'முயன்றால் முடியாதது உண்டோ?' என்றான் ஒருவன். இரண்டு நாட் கள் வகுப்பிற்கு வராததால் நான் பட்ட அவ மானம் அது. விடை சொல்லாததற்குத் தண் டனை வழங்கினர் தமிழ் ஆசிரியர். 'முயன்றால் முடியாததும் உண்டோ' என்று ஆயிரம் தடவை எழுதிக் கொடுத்தபிறகுதான் நீ வீட் டிற்குப் போகவேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டுப் போனார். ஆயிரம் தடவை எழுதுவது எப்படி என்று திகைத்தேன். 'முயன்றால் முடியாதது உண்டோ' என்று என் அந்தராத்மா என்னைக் குத்தி எழுப்பி யது. கடமையைச் செய்து முடித்தேன்.

மனதை எது பண்படுத்துகிறதோ அது மந்த்ரம் எனப்படுகிறது. சிவன், விஷ்ணு, சக்தி என்று ஒவ்வொரு தெய்வங்களுக்கும் ஆயிரம் திருநாமங்களைச்சூட்டினர்கள் ரிஷிகள். அவற்றை முறையாக ஜபித்து வந்தால் சாத கன் இறைவனை அடைவான். என் மனதைப் பண்படுத்தி என்னை உயர்நிலைக்குக் கொண்டு வந்தது இந்த வாசகம். ஆகவே எனக்கு இது மந்த்ரம்தானே! மறுநாள் சுதந்தரதினவிழா. காலையில் அனைவரும் புத்தாடை அணிந்து தேசியக் கொடி ஒன்றைச் சட்டையில் அணிந்து கொண்டு வரவேண்டும் என்று தலைமை ஆசிரி யர் ஆணையிட்டார். பள்ளி முழுதும் புத்தாடை அணியப் பெற்ற குழந்தைகளிடம் மகிழ்ச்சி தாண்டவமாடியது.கூட்டத்திலிருந்த என்னைக் கை நீட்டிக் கூப்பிட்டார் தலைமை ஆசிரியர். அழுக்கடைந்த சட்டையும், டிராயரும் கூட்டத் தில் இருந்த என்னைக் காட்டிக்கொடுத்தன. வேலைக்காரியின் பிள்ளை என்று என்னை முன்பே அறிந்திருந்த தலைமை ஆசிரியர் தீப் பொறி போன்று சீறினர். 'இன்றைய தினத் தில் கூடவா நீ இந்தக்கோலத்தில் வர வேண் டும்! புதிய சட்டை, டிராயர் போட்டுவந்தால் வா. இல்லையென்றால் பள்ளிப்பக்கம் கால் வைக்காதே ஓடு' எனக் கடுமையாகத் திட்டி ஓட்டிவிட்டார். அழுதேன். எதற்காக? அத் தனைபேருக்கு மத்தியில் வைத்துப் பேசியதற் காகவா? அல்ல. நான் ஏன் ஏழையாகப் பிறந்தேன்? வாழ்நாள் முழுதும் இப்படியே இருந்து அழிந்து போவதற்குத்தானு என்று ஏங்கினேன். அறிவுள்ள அன்னை அன்போடு அணைத்து ஆறுதல் சொன்னாள். வறுமை யோடு போராடிய அந்த விதவைத்தாய் என் மனநிலையை உணர்ந்தாள். சுதந்தரதினத் தன்று அடிமைத் தளையிலிருந்து நாடு விடுதலை அடைந்தது. மகனே, உனக்கும் விடுதலை.

இனி, நானே உனக்குக் கல்வி கற்றுத்தரு கிறேன் என்ருள்.

வறுமை தீர நானும் வேலைதேட வேண்டிய தாயிற்று. படிக்கவேண்டிய வயதில் பணியை நாடி அலைவது வேதனையாக இருந்தது. 'இந்த வயதில் எனக்கு யார் வேலை தருவார்கள்? என்று அன்னையைக் கேட்டேன். 'தியாகம் செய்கிற நல்லவர்களுக்கு வேலை தானே தேடி வருமப்பா' என்ருள். 'தியாகம் செய்தல் என்ருல்என்ன?' என்று அடுத்து வினவினேன். யார் பிரதிகூலமானதைத் தங்களுக்கு எடுத்துக்கொண்டு அனுகூலமானதை மற்றவர் களுக்கு வழங்குகிருர்களோ அவர்களேதியாக புருஷர்கள். ஆகவே தன்னம்பிக்கையோடு போ. உனக்கு வெற்றி உண்டாகும் என ஆசிர்வதித்து அனுப்பினுள். டவுன் பஸ்ஸைப் பிடித்தேன். ஏராளமான கூட்டத்தில் மோதி எப்படியோ உட்கார இடமும் பிடித்தேன். பஸ் முழுதும் கூட்டம் நிரம்பி வழிந்தது. பஸ் புறப்படவிருந்தது. வயது முதிர்ந்த மூதாட்டி ஒருத்தி கையில் தடியுடன் நிற்கவும் முடியாத நிலையில் இருந்தாள். அம்மாதுவுக்கு உட்கார இடம்தர எந்த ஜீவனுக்கும் இரக்கம் வர வில்லை. கண்டும் காணுததுபோல இருந்தனர். தாய் சொன்ன வாசகம் என்னை எழுப்பியது. எழுந்து சென்று அம்மூதாட்டியை என் இடத்தில் அமரச்செய்துவிட்டு நான் நின்றுகொண் டேன். தியாகம் செய்ததில் முதல் பயன் மனச் சாந்தி அடைந்தேன். பஸ் நின்றவுடன் கீழே இறங்கினேன். ஒரு பெரியவர் என் தோளில் கைவைத்து என்னை யார் என்று வினவினுர். வேலை தேடிப்போவதாக அறி வித்தேன். 'சுயநலம் பெருகி வருகிற இக் காலத்தில் சுயநலமற்ற உன்னைக் கண்டதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். பஸ்ஸில் நீ நடந்துகொண்ட விதத்தைக் கண்டேன். உன் போன்றவர் அதிகரிக்கும்அளவு நாடு மேன்மை யுறும். உனக்கு வேலை கொடுத்து என் வீட் டோடு உன்னை வைத்துக்கொள்கிறேன்' என் ருர் அந்த நல்லவர். ஒரு தொழிற்சாலையின் உரிமையாளர் அவர். அவருடைய பராமரிப் பில் தொழிற் கல்வியைப் பத்தாண்டுகள் கற் றேன். இதற்கிடையில் என் அன்னைக்கு மாதந்தோறும் பணம் அனுப்பி வந்தேன். தொழிலில் திறமை பெற்றுனவுடன் எனக்குக் கணிசமாக மூலதனம்கொடுத்துத்தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்கச் சொன்னுர் அந்தப் பெருந் தகை. அவருடைய அருளாசியால் ஆல விருட்சம் போலத் தொழில் பெருகி வளர்ந்து வருகிறது. இங்கு வேலை செய்யும் பணி ஆட்கள் அனைவரும் கடமை உணர்வுடனும் பொறுப்புணர்வுடனும் வேலை செய்கின்ற னர். அவர்களுடைய கஷ்டத்தை என் கஷ்ட மாகக் கருதி வருகிறேன். அவர்களை நான் மனதார நேசிக்கிறேன். அவர்களும் என்னை உளமார நேசிக்கின்றனர். அவர்களோடு சேர்ந்து நானும் உழைக்கின்றேன். ஆடம்பர வாழ்வை உதறிவிட்டு அவர்களைப் போன்று எளிய வாழ்வு வாழ்வதில் மகிழ்கிறேன். இத் தகைய பரஸ்பர இணக்கம் தொழிலாளர் களுக்கும் நிர்வாகத்தினருக்கும் இடையில் இருந்தால் உற்பத்தி எவ்வளவு பெருகும்! வேலை நிறுத்தத்தைக் காணமுடியுமா? கத வடைப்பை நினைத்துப் பார்க்க முடியுமா! அர சியல் கட்சிகள்தாம் விஷமத்தனம் பண்ணி அவர்களிடம் பிளவு உண்டுபண்ண முடியுமா!

இந்த உயர்ந்த கொள்கைகளை எங்கிருந்து கற்று இப்படி வாழ என்னுல் முடிகிறது என நீங்கள் வினு எழுப்பலாம். என்னை ஈன்றெடுத்த அன்னைதான் என் குரு. அவளு டைய அனுபவமாகிய பாடத்தைத்தான் இந்த உலகத்தில் நான் கற்றேன். இன்னும் படித்து வருகிறேன். விதவைத் தாய் ஒருத்தி என்ன செய்துவிட முடியும் என நீங்கள் நினைக்கலாம். எனக்குத் தியாகத்தை உபதேசித்ததோடு அவள் சும்மா இருந்து விடவில்லை. நான் அனுப்பிய பணத்தை வைத்து ஏழைப் பிள்ளைகளுக்கு உடை, உணவு, புத்தகம், சிலேட்டு போன்றவற்றை வாங்கி அவர்களைப் பராமரித்து வந்தாள். ஒருதடவை நான் என் அன்னையை நேரே கண்ட காட்சி என் உள் ளத்தை வியப்பில் ஆழ்த்தியது. ஒரு சிறிய இடம் வாங்கி அங்குப் பள்ளி ஒன்று நடத்தி வந்தாள். இரவு நேரங்களில் கோயில்களில் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தாள். எழுதப் படிக்க மட்டுமே தெரிந்திருந்த அன்னை பத்தாண்டுகளில் அடைந்திருந்த மகத்தான முன்னேற்றம்தான் அது. ஒரு எளிய விதவைத்

தாயால் இவையாவும் முடியுமா என்று எண்ணியபோது 'முயன்ருல் முடியாதது உண்டோ' என்று என் இதயம் பேசியது. அன்னையை வணங்கி வினவினேன். விதவைக்கோலம் ஏற்படுவதை இழிவாக, பாபமாகச் சமுதாயம் கருதுகிறது. ஆத்மசாதனத்தில் தீவிரமாகக் கவனம் செலுத்தவும், சமுதாயத்திற்கு நல்ல முறையில் பணியாற்றவும் விதவைகளால்தான் முடியும். ஆகவேதான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரும் 'தான் அடுத்த பிறவி எடுக்க வேண்டி வந்தால் ஒரு விதவைப் பெண்ணைப் பிறவி எடுக்க விரும்புகிறேன்' என்று சொன்னர். ஆகவே 'எல்லாம் நன்மைக்கே' என்று இறைவன் பொறுப்பில் நம்மை ஒப்படைத்துநல்லதைச் செய்துகொண்டுபோவோம். நமக்கு எது நல்லது என்பதை நம்மைக் காட்டிலும் கடவுள் நன்கு அறிகிருர். "விதவையானதைக் குறித்து நான் பெருமையடைகின்றேன். ஏனெனில் இப்பொழுது எனக்கு ஒரே துணை இறைவன்தான். இத்தகைய சரணுகதியைத் தந்த இறைவனுக்கு என் வணக்கம்" என நீண்ட சொற்பொழிவு ஒன்றை உணர்ச்சி வயப்பட்டுப் பேசினர். அன்னையின் பேச்சு என் கண்ணில் ஆனந்தக் கண்ணீரை நிரப்பியது. "அம்மா இந்த வயதான காலத்தில் ஏன் இன்னும் உழைத்துக்கொண்டு இருக்கிறீர்கள்? ஓய்வு எடுத்துக்கொள்ளக் கூடாதா?" என்றேன்.ஆனல்அன்னைகொடுத்த பதில் என்னைப் பரவசப்படுத்தியது. "மகனே, விலங்குகளில் பசுவையும், மரங்களில் தென்னையையும் பார். பசுவுக்குக் காமதேனு என்று பெயர்.கோமாதா என்று ஏன் அழைக்கிரேம்? நம்மிடமிருந்து மிக அற்பமாக உள்ள கழுநீரையும், வைக்கோலையும் ஏற்று அமிர்தத்துக்கு ஒப்பான பாலைப் பொழிந்து தந்து நம்மைக் காக்கிறதல்லவா? பசுவினிடமிருந்து கிடைக்கும் பொருள்கள் நமக்குப் பயன்படுகின்றனவல்லவா? கற்பகவிருட்சமாக உள்ள தென்னை மரத்தின் ஒவ்வொரு பகுதியும் மக்களுக்குப் பலவிதங்களில் பயன்படுகின்றது. ஆனல் ஏற்பது மிகவும் அற்பமானது. நாம் ஒவ்வொருவரும் உலகில் ஏற்பது குறைவாகவும், உலகுக்கு வழங்குவது அதிகமாகவும் இருக்கவேண்டும். அதிகம் ஏற்று உலகுக்கு எதுவும் வழங்காது கடன்பட்ட நிலையில் போக நான் விரும்பவில்லை. அதனுல்தான் வயது முதிர்ந்தும் பிறர்க்குப் பயன்படும் வகையில் ஏதாவது செய்துகொண்டிருக்கிறேன்" என்ருர்.

ஐயா, என் வாழ்வின் முன்னேற்றத்திற்குத் துணையாயிருந்தவர்கள் என் தாயும், நீங்களும். சென்ற வாரம் உங்கள் புதல்வருக்காக வேலை தேடிச் சென்னை வந்ததாகக் கேள்வியுற்றேன். என் வீட்டிற்கு நீங்கள் வந்தபோது நான் இல்லாமல் வெளியூர் சென்றிருந்ததைத் துரதிருஷ்டமாகக் கருதுகிறேன். ஆனல் நான் வந்தவுடன் உங்கள் விலாசத்தைக் கொடுக்கும்படி என் வேலையாளிடம் சொல்லிவந்து என் பொருட்டுச் சிரமம் எடுத்த உங்களுக்கு என்ன உதவி செய்தாலும் ஈடாகாது. உங்கள் மகன் எனக்குச் சகோதரன். நான் இருக்குமிடத்துக்கு நீங்களிருவரும் புறப்பட்டு வாருங்கள். நான் ஆரம்பித்துள்ள தொழிற்சாலையில் உங்கள் மகனை ஒரு பங்குதாரராகச் சேர்த்துப்பாதி சொத்தை எழுதி வைக்கிறேன். இத்துடன் உள்ள ரூபாய் இரண்டாயிரத்துக்குண்டான காசோலையைப் பெற்றுக்கொள்ளுங்கள். நன்றி மறவேல் என்ற உண்மையை உணர்ந்து செயல்படவும், மேலும் என் வாழ்வு பல்லாயிரக்கணக்கானவர்களுக்குப் பயன்படவும் என்னை வாழ்த்துங்கள்.

இங்ஙனம்,
உங்கள் உண்மை மாணவன்,
இராமன்.

நன்றி மறவேல் என்ற நல்லுரைக்கு எடுத்துக்காட்டாகக் கும்பகர்ணனையும்,கர்ணனையும் இதிகாசங்கள் சுட்டிக்காட்டுகின்றன. செய்ந்நன்றி அறிதல் என்னும் சிறந்த பான்மை வளருமளவு சமுதாயம் நெறியான வழியில் செல்லும். முயற்சிக்குமுக்கியம் கொடுத்துச் சுயநலமற்று உழைத்தஇராமன் வழிநம்வழி. அவன் வழியிலும், அவன் அன்னை நடந்து காட்டிய நெறியிலும் செல்லுபவர் இகம் பரம் அனைத்திலும் அழியாப் பேறுபெறுகின்றனர். 'நன்றி மறப்பது நன்றன்று' என்னும் கோட்பாட்டையும், 'எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை; செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்ற குறளையும் நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

அருளாளப் பெருமக்கள் நாடு, மொழி, இனம், ஜாதி முதலிய குறுகிய பிணைப்புகளுக்கு அப்பாற்பட்டவர்கள்; சமுதாயப் பொது நோக்கு உடையவர்கள். தங்கள் கருத்துக்களைப் பிறர் ஏற்றுக்கொள்ளவேண்டும் என அவர்கள் வலியுறுத்தியதில்லை. விதைக்கிறபடி விதைக்கிறேன்; முளைக்கிறபடி முளைக்கட்டும் என்னும் எண்ணத்தில், நாடு முழுவதும் பக்தி மார்க்கத்தைப் பரப்பிய பெருமக்கள் அவர்கள். பூகோள அமைப்பு அவர்களை எவ்விதத்திலும் பாதித்ததில்லை.

அருளாளரான அப்பெருமக்கள் ஒரே இடத்தில் இருந்தே தபம், ஜபம் செய்து தாங்கள் நினைத்ததை அடைந்திருக்க முடியும். தாங்கள் மட்டும் மோட்சம் அடைவது அவர்களுக்கு முக்கியமாக இருந்ததில்லை. சாதாரண மக்களும் அழிவற்ற இன்பம், ஆன்ம அமைதி ஆகியவற்றை அடைய வேண்டும் என்ற பெரு நோக்கத்துடன் தலயாத்திரை செய்து பக்தி உணர்வைப் பெருக்கினூர்கள்.

மகோதை என்பது சேர நாட்டின் தலைநகரமாகக் கி. பி. எட்டாம் நூற்றூண்டில் விளங்கியது. சேரமான் பெருமாள் என்ற பெருமாக் கோதையார் அங்கே ஆண்டுவந்தார். சேரமான் பெருமான் சிறந்த சிவபக்தர். அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். மகோதை கடற்கரைப்பட்டினம். இவ்வூரை இப்போது கிராங்கனூர் என்று சொல்லுகிறூர்கள். திருச்சூர் இரயில் நிலையத்துக்கு அருகில் உள்ளது.

மகோதைக்கு அருகில் திரு அஞ்சைக்களம் என்னும் சிவத்தலம் உள்ளது. இங்கே பழமையான கோயில் உள்ளது. பரசுராமர் தன் தாயைக் கொன்ற பாவம் நீங்கப் பூஜை செய்த தலம் இது. இறைவன் பெயர் அஞ்சைக் களத்து அப்பர். இறைவி உமையம்மை.

சுந்தரர் தமிழ்நாட்டில் பல தலங்களுக்கும் சென்று வழிபாடு செய்து, கோவை மாவட்டம் அவிநாசிக்குச் சென்று அவிநாசியப்பரைப் போற்றிப் பாடுகிறூர். பிறகு அங்கிருந்து சேர நாட்டில் உள்ள திரு அஞ்சைக்களத்துக்கு வருகிறூர்.

அறுபத்துமூன்று நாயன்மார்களின் சரிதம் வெளிவரக் காரணராக இருந்தவரும், திருத்தொண்டத் தொகை பாடியவரும், தேவாரம் பாடியவரும், சிறந்த சிவனடியாருமான சுந்தரர் தமது நாட்டுக்கு எழுந்தருளி வருவதை அறிந்த சேரமான் பெருமாள் பெருமகிழ்ச்சியுடன் எதிர்கொண்டழைத்துச் செல்லுகின்றூர். திருவஞ்சைக்களம் திருக்கோயிலுக்குச் செல்லுகின்றனர் இருவரும். தமது பாசப்பிணி அகலுமாறு அஞ்சைக்களத்து அப்பரைச் சுந்தரர் இறைஞ்சிப் பாடுகிறூர்.

"இழைக்கும் எழுத்துக்கு உயிரே ஒத்தியால்
இலையே ஒத்தியால் உளையே ஒத்தியால்
குழைக்கும் பயிர்க்கு ஓர்புயலே ஒத்தியால்
அடியார் தமக்கு ஓர்குடியே ஒத்தியால்
மழைக்கும் நிகர்ஒப்பன வன்திரைகள்
வலித்து ஏற்றி முழங்கி வலம்புரிகொண்டு
அழைக்கும் கடல் அம்கரைமேல் மகோதை
அணியார் பொழில் அஞ்சைக் களத்து அப்
பனே."

— வலம்புரிச் சங்கைக் கரையிலே ஒதுக்கும் கடலின் கரையிலே உள்ள திருவஞ்சைக்களம் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள தந்தையே! எழுத்துக்களில் உயிர் எழுத்துப் போல நீ விளங்கி உலகத்தை இயக்குகிறூய். தழைத்து வளர்கின்ற பயிர்க்கு மழை மேகம் உதவுவது போல, உயிர்களுக்கு உதவுகிறூய். அடியார்களின் அருகிலேயே எப்போதும் இருக்கிறூய். அவர்களுடைய குடும்பத்தில் ஒருவனூகத் திகழ்கிறூய் எனப் போற்றுகிறூர்.

"இழைக்கும்எழுத்துக்கு உயிரே ஒத்தி"— உயிர் எழுத்து ஏனைய எழுத்துக்களை இயக்குவது போல, எந்தையே! நீ உலகத்தை இயக்குகிறூய்.

எழுத்துக்களுள் உயிர் எழுத்துக்கள் மிகவும் முக்கியமானவை. அ என்ற எழுத்து முதல் ஔ என்ற எழுத்து முடிய உள்ள உயிர்எழுத்துக்கள் இல்லாவிட்டால் மொழி இயங்குமா? எழுத முடியுமா? பேச முடியுமா? இயலாது. உயிர் எழுத்துக்கள் இல்லாமல் வெறும் மெய்யெழுத்துக்களைக் கொண்டு எந்த வார்த்

தையை உண்டாக்கி எழுதவும் பேசவும் முடியும்?... முடியாது.

உயிர் எழுத்துக்கள் இருந்தால்தான் மெய்யெழுத்துக்களுடன் சேர்ந்து உயிர்மெய்யெழுத்து உண்டாகும். எனவே, உயிர் எழுத்து இல்லாமல் சொற்களும், வாக்கியங்களும் உண்டாகமாட்டா. உயிர் எழுத்துக்கள்தாம் மற்றைய எழுத்துக்களை இயக்குகின்றன. மற்றைய எழுத்துக்களின் உயிர், உயிர் எழுத்துக்களில்தான் உள்ளது. ஆனது பற்றியே நம் முன்னோர் முக்கியமான அந்த எழுத்துக்களுக்கு உயிர் எழுத்துக்கள் எனப் பெயர் அமைத்தார்கள்.

அதுபோல, உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும், உயிர்களும் இயங்குவதற்கு இறைவன் உறுதுணை வேண்டும். இறைவன் இல்லாது போனுல் உலக இயக்கம் இல்லை. ''ஆட்டுவித்தால் யார் ஒருவர் ஆடாதாரே'' என்ருல், ஆட்டாது போனுல் ஒருவரும் ஆடமாட்டார்கள்—அதாவது எந்தப் பொருளுக்கும் இயக்கம் இல்லை என்பது கருத்து.

நடக்க வேண்டியதை நடக்க வைத்தான்; நிற்க வேண்டியதை நிற்க வைத்தான்; கிடக்க வேண்டியதைக் கிடக்க வைத்தான்; அவன் அம்பலத்தில் ஆடுகின்ருன். எல்லாப் பொருள்களும் இயங்குகின்றன.

''மூல அணுக்கூறு சதா ஆடிக்கொண்டே இருக்கிறது என நாங்கள் சொல்லுகிருேம். ஆதிமூலமான, அணுவுக்குள் அணுவாக விளங்கும் உங்கள் நடராஜரும் ஆடிக்கொண்டிருப்பதாகச் சொல்லுகிறீர்கள்'' என்று நம்மை வியந்து கேட்கிருர் அணு விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்.

தமிழ் மொழியின் எழுத்தமைப்பு, சொல்லமைப்பு ஆகியவற்றைச் சற்றே நுணுக்கமாகச் சிந்தனை செய்தால், அவை கடவுள் உண்மை, வேத இயல்பு ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டு விளங்குவதைக் காணலாம் என அறிஞர்கள் கூறுகின்றனர்.

உயிர் அற்ற உடம்பு சவம், அதற்குப் பிரதானம் கொடுப்பதில்லை. உயிர் உடம்போடு கூடினுல்தான் முதன்மை இடம் பெறும்.

அதுபோல, உயிர் இல்லாத மெய்யெழுத்து மொழிக்கு (வார்த்தைக்கு) முதலில் வராது. உயிர் எழுத்தோடு கூடி, உயிர்மெய்யெழுத்தானுல்தான் வரும்.

இறைவனேடு தொடர்புகொள்ளாத உலகப் பொருள்களுக்குச் சிறப்பில்லை. இறைவனேடு தொடர்புடைய பொருள்களே தலைமையிடம் பெறுகின்றன.

அகர உயிர் எல்லா எழுத்துக்களுக்கும் ஆதாரம். எங்கும் நிறைந்த இறைவன் எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரம்.

உயிர் எழுத்து பல்வேறு மெய்யெழுத்துக்களுடன் கூடிப் பல்வேறு வடிவங்களைப் பெறுகிறது. உயிரும் பல்வேறு உடம்புகளுடன் பொருந்தி தோற்றத்துக்கு வருகிறது.

வள்ளுவரும், ''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு'' என்கிருர்.

''எழுத்துக்களில் நான் அகரமாக விளங்குவேன்'' என்கிருன் கண்ணன்.

''அகர உயிர் எழுத்து அனைத்தும் ஆகி வேருய் அமர்ந்தது என அகிலாண்டம் அனைத்துமாகி''; ''அ உயிர்போல் எவ்வுயிரும் ஆன பிரான்'' என இறைவனுக்கு அகர உயிரை ஒப்பிட்டுக் கூறுகிருர் தாயுமான அடிகளார்.

''அக்கரங்கள் [அட்சரம்-எழுத்து] தோறும் சென்றிடும் அகரம் போல் நின்றனன் சிவனும் சேர்ந்தே'' என்பது சிவஞான சித்தியார்.

''அகர உயிர்போல் அறிவாகி எங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து'' என்பது திருவருட் பயன்.

இவ்வுதாரணங்கள் எல்லாம் எவற்றை உணர்த்துகின்றன? ''எல்லா எழுத்துக்களுக்கும் உயிர் எழுத்துக்கள் ஆதாரம்; உலகப் பொருள்கள் அனைத்திற்கும் சிவனே ஆதாரம்'' என்ற உண்மையை உணர்த்துகின்றன.

''மொழி என்பது மக்களை இறைவனிடத்துச் செலுத்தும்கருவி'' என்ற சான்ருேர் ஒருவரின் கருத்து ஒப்பு நோக்கத்தக்கது. எழுத்துக்களால் ஆவதுதானே மொழி.

''இலையே ஒத்தியால் உளையே ஒத்தியால்'' என்கிருர். இறைவா! நீ உலகத்தில் இல்லவும் இல்லை; இருக்கவும் செய்கிருய்.

இறைவன் சூட்சும வடிவமாக, எங்கும் அகண்டாகாரமாக விளங்குகிருன். அவனுக்கு வடிவம் இல்லை. ஏன்? எல்லா வடிவங்களாக

வும் அவன் திகழ்கிருன். அவனுக்கு என்று தனிவடிவம் இல்லே. இல்லே என்று சொல்லு கின்றவர்களுக்கு அவன் இல்லே. இருக்கின் ருன் எனச் சொல்லுகின்றவர்களுக்கு அவன் தோற்றமளிக்கிருன்.

இறைவன் எங்கும்நிறைந்துள்ளான். பகுத்து உணர்ந்து பார்க்காமல், சிவலிங்கம் முதலிய திருமேனியே சிவம் ஆகும் என நம்பி வழிபடு கின்ற சரியையாளர்க்குச் சிவன் வெளிப்பட்டு அருள் செய்வான். அருவப் பொருள் சிவன் என நினேந்து, அகத்திலே உணர்வுகொண்டு தியானம் செய்கின்றவர்களுக்கும் சிவன் அருள் செய்வான். எங்கும் நீக்கம் அற நிறைந்த பரிபூரணப் பரம்பொருளாக இலங்கு கின்ருன். விண் நிறைந்து, மண் நிறைந்து, மிக்காய், விளங்கு ஒளியாய், எண்ணிறந்து எல்லேயில்லாதவனுகத் துலங்குகின்ருன். அணு வுக்குள் அணுவாகவும், அண்டத்துக்கு அப் பாலாகவும் தோற்றமளிக்கிருன்.

''குழைக்கும் பயிர்க்கு ஓர் புயலே ஒத்தி''— வாட்டம் அடைகின்ற பயிரைத் தழைக்கச் செய்யவரும் மழை மேகமாகத் திகழ்கிருய். வாடுகின்ற பயிரின் வாட்டத்தைப் போக்கு வதற்குத் தரைவழியாகப் பாய்ச்சுகின்ற தண் ணிரை விட, மழை நீரே பெரிதும் உதவும். மழைநீர் மேலே இருந்து வீசிப் பெய்கின்ற போது, பயிரில் உள்ள அழிக்கும் பூச்சிகள் அழிக்கப்படுகின்றன. மின்னல் மூலம் நிறைந்த நைட்ரஜன் பயிர்களுக்குக் கிடைக்கிறது. மேலும், யாரையும் எதிர்பார்க்காமல் எந்த நேரத்திலும் பயிர்க்கு உதவி செய்வது மழை. அதேபோன்று, பிறந்துபிறந்து இறந்துஇறந்து சோர்வு அடையும் ஆன்மாக்களின் சோர்வைப் போக்குபவன் இறைவன். இப்பிறவி எப் போது நீங்கும்! இனிமேல் பிறவி வாய்க்கக் கூடாதே என்றுதான் ஆன்ருேர்கள் எண்ணு வார்கள்; கவலேப்படுவார்கள்.

பயிர், வாடுகின்ற சமயத்தில் தனக்குத் தண்ணீர் வேண்டும். உதவி செய்ய வேண்டும் என மழை மேகத்தைக் கேட்பதில்லே. மழை கருணே மழை பயிரின் வாட்டத்தை அறிகிறது; மழையாகப் பொழிந்து உதவுகிறது.

ஆனுல், ஆன்மா அறிவுடையது. "எழுகடல் மணலே அளவிடில் அதிகம்; எனது இடர்ப் பிறவி தொலேயாதே" என அதற்குப் பகுத் தறிவோடு பாடி வேண்டத்தெரியும். அப்படி வேண்டினுலும் இறைவன் உணர்ந்து, உரிய காலம் வரும் போதே, ஆன்மா பக்குவம் அடை யும் காலத்தேதான் திருவருள் சுரப்பான்.

வாதவூரருக்கு வையை ஆற்றிலே உதவியது போலவும், கண்ணப்பருக்குக் காளத்தி மலே யிலே உதவியது போலவும் காலம் வரும் போது உதவி செய்வான் அக்கருணே வள்ளல்.

பயிர்க்கு மழை நீர் வேண்டும் எனக் கருதி மழை பெய்யவில்லே; மழை தானுகப் பெய் கிறது; தேவையுள்ள பயிர் நீரை ஏற்றுக் கொள்ளுகிறது எனவும் கூறலாம்.

அதே போன்று, இறைவன் திருவருள் மழை எங்கும் சிறந்து பொழிகிறது. பக்குவ ஆன்மா அதனே ஏற்றுக்கொள்ளுகிறது.

"அடியார் தமக்கு ஓர் குடியே ஒத்தி"— அடியார்களுக்கு அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவனுகத் திகழ்கிருய்.

சுந்தரருக்காகப் பரவையாரிடம் தூது போனவர் சிவபெருமான். அப்போது, சுந்தரர் குடும்பத்தில் ஒருவராகத் திகழ்கிருர். பக்தி பூண்டொழுகிய கிழவியின் மகளுக்குத் தாயாகி —தாயுமானவன் ஆகி—மகப்பேற்றுக்கு உத வும்போது, அக்குடும்பத்தில் ஒருவனுகத் திகழ் கிருன். யான், எனது என்னும் செருக்கினே அகற்றும், உள் உணர்வோடு இடைவிடாது தியானிக்கும் அடியார்களுக்குப் பணி செய்யும் அடியாராகவும் இறைவன் திகழ்கிருன்.

உலகத்தை இயக்குகின்ருய்; வாடிய பயிர்க்கு இரங்கி மழை மேகமாக உதவுகிருய்; அடியார்களுக்கு இன்னருள் சுரக்கின்ருய்; இங்ஙனம் உதவுகின்ற பொழுது அடியேனுக்கு உதவாமல் இருக்கலாமா? அருள் கூர்ந்து உதவுதல் வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிருர் சுந்தரர்.

"ஆக்கும் அழிவும் ஐயநீ என்பன் நான்
சொல்லுவார் சொற்பொருளவை நீ
என்பன் நான்
நாக்கும் செவியும் கண்ணும் நீ என்பன் நான்
நலனேஇனி நான்உன்னே நன்கு உணர்ந்தேன்
நோக்கும் நெதியம் பல எத்தனேயும்
கலத்திற்புகப் பெய்துகொண்டு ஏற நுந்தி
ஆர்க்கும் கடல்அம் கரை மேல் மகோதை

அணியார் பொழில் அஞ்சைக் களத்து
அப்பனே. ''

—அஞ்சைக் களத்து அப்பனே! இப்போது யான் உன்னை நன்கு உணர்ந்து கொண்டேன். எல்லாப் பொருள்களின் ஆக்கத்திற்கும் அழிவிற்கும் காரணகர்த்தா நீயே. இவ் இரண்டுக்கும் நீ காரணம் இல்லை என்று வேறு பல காரணங்களைக் கூறுகின்றார்களே அப்படிச் சொல்லுகின்றவர்களின் சொற் பொருளாக விளங்குபவனும் நீயே! புலன் உணர்வுக்குக் காரணமான நாக்கு, செவி, கண் என்பனவும் நீயே! இவ்வாறு யான் துணிவாகச் சொல்லுவேன் என்கிறார் சுந்தரர்.

"ஆக்கும் அழிவும் ஐய நீ'' —எல்லாப் பொருள்களின் ஆக்கத்திற்கும் அழிவுக்கும் காரணகர்த்தா நீயே.

உலகம் படைக்கப்படும் முறை, ஆன்மா உடம்புடன் கூடிப் பிறவிக்கு வருகின்ற விதம், மனித வாழ்வின் நெறிமுறைகள் ஆகியவை பற்றிச் சமயநூல்கள் கூறுகின்றன.

கடவுள் அனாதி; உயிர்கள் அனாதி; மாயை என்ற ஒன்றில் இருந்து கடவுள் இவ் உலகத்தைத் தோற்றத்துக்குக் கொண்டு வருகிறான். உயிர்கள் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு, இவ்வுலகத்தில், ஆன்மாக்கள் தனு கரண புவன போகங்களைத் துய்க்குமாறு செய்கிறான்.

உலகம் எவ்வாறு தோன்றியது என நம் முன்னோர்கள் சிந்தனை செய்தார்கள். எந்தப் பொருள் படைக்கப் படுவதாக இருந்தாலும் அதற்கு ஏற்ற மூலப்பொருள் வேண்டும். மாயை என்ற மூலப்பொருளில் இருந்து இவ் வுலகம் உண்டாக்கப்பட்டது. மாயை என்ற மூலப்பொருளில் நுண்மை வடிவமாக இவ் உலகம் ஒடுங்கியிருந்தது. அவ்வாறு சூட்சுமமாக ஒடுங்கியிருப்பதைத்தான் பருப்பொருள் வடிவமாக இறைவன் தோற்றத்துக்குக் கொண்டு வருகிறான். உலகில் உள்ள பல்வேறு பொருள்களையும் படைக்கிறான் என வேதநூல்களில் சொல்லப்படுகிறது.

இறைவன் ஏன் உலகைப் படைத்துத் தோற்றத்துக்குக்கொண்டு வரவேண்டும்? உலகப் பொருள்களை ஏன் படைக்க வேண்டும்? ஆன்மாக்களுக்கு ஏன் உடம்பைக் கொடுக்க வேண்டும்? என்பன போன்ற வினாக்கள் எழுவது இயற்கை.

நம் முன்னோர்களே இவ் வினாக்களை எழுப்பி அவற்றுக்கு விடைகளும் சொல்லியுள்ளனர். "உயிர்கள் மீதுள்ள கருணையினால்தான் இறைவன் இவ்வளவு செயல்களையும் செய்கிறான்'' என்பதே அவ்வினாக்களுக்கு உரிய விடை.

உயிர்கள் உடம்பு பெறாமல், அமைதி அடையாமல் இப்பிரபஞ்சமல்லாப் பெருவெளியில் எப்போதும் உழன்று கொண்டிருக்கின்றன. அப்படிப்பட்ட ஆன்மாக்கள் உடம்பைப் பெற்று இன்ப துன்பங்களை அனுபவிக்கத் தக்க இடம் இவ்வுலகம்தான். ஆகவே, இவ் வுலகை உண்டாக்கினான். ஆன்மாக்கள் எல்லா இன்பங்களையும் அனுபவிப்பதற்கு ஏற்றவாறு எல்லாப் பொருள்களையும் படைக்கிறான். அலைந்து திரிந்து கொண்டிருக்கும் ஆன்மாக்களுக்கு உடம்பைக் கொடுக்கிறான்.

மானிடர்களாகப் பிறக்கும்படி ஆன்மாக்களுக்கு இறைவன் உடம்பைக் கொடுக்கிறானே! ஏன்? எல்லா ஆன்மாக்களைக் காட்டிலும் மானிட ஆன்மா உயர்ந்தது. அதனுடைய மனம் விரிந்தது. பகுத்தறிவு உடையது. எந்தப் பிறவி எடுத்தாலும் மானிடப் பிறவி எடுத்தால் தான் கடவுளை நினைத்து உயர்வு அடைய முடியும். ஆன்மாக்கள் தன்னை நினைத்து உய்தி அடையவேண்டும் என்ற பெருங்கருணை நோக்கோடு மானிடப் பிறவியைப் படைத்தான். எவ்வளவு பெரிய கருணைவள்ளல் அவன்! கருணாநிதியாகவும், கருணாசாகரனாகவும், கருணாமூர்த்தியாகவும் ஆன்றோர்கள் அவனைக் கொண்டாடுகிறார்கள்.

அழிவுக்கும் அவன்தான் காரணன். மாயையில் இருந்து தோற்றுவித்த உலகை மீண்டும் மாயையில் ஒடுக்கம் செய்கிறான் இறைவன். இன்ப துன்பங்களை அனுபவித்த ஆன்மாக்கள் இளைப்பாற்றிக் கொள்ளும் வகையிலும் உலகை லயத்துக்குக் கொண்டு வருகின்றான். பிரளய காலம் என்ற ஒன்றை ஏற்படுத்தி எல்லாவற்றையும் அழிக்கிறான். ஆனால் ஆன்மாவை அழிப்பதில்லை. ஏன்? ஆன்மா அழியாதது. இறைவன் தானும் அழிவதில்லை.

இவ்வாறு உலகைப் படைப்பது, காப்பது, அழிப்பது எல்லாம் ஆண்டவனுக்கு ஒரு விளை

யாட்டு. "காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" என்பது அனுபவ வாக்கு. யாரும் செய்ய முடியாத விளையாட்டு அது. ஆகவே அது திருவிளையாடல் ஆகிறது.

ஆண்டவனே இல்லை; ஆண்டவன் செயலும் இல்லை. உலகம், உலகப் பொருள்கள் எல்லாம் சூன்யம்; வெறும் மாயத் தோற்றம். ஆண்டவன் உலகத்தையோ, உலகப் பொருள்களையோ படைக்கவில்லை எனச் சிலர் கூறுகிறார்கள்.

தெய்வ நம்பிக்கை அற்றவர்கள் அவ்வாறு சொல்லுகிறார்கள். அவர்கள் அப்படிச்சொல்லுகிறார்களே அவர்களை அவ்வாறு சொல்ல வைத்தவனே இறைவன்தான். சொல்லுகின்ற சொற்களுக்குப் பொருளாக விளங்குகின்றவனும் இறைவனே என்கிறார் சுந்தரர். அவர் தெய்வ நம்பிக்கை உடையவர்.

"நாக்கும் செவியும் கண்ணும் நீ" — இவ்வாறு சொல்பவர் சுந்தரர். பிரத்தியட்ச உண்மையைக் கூறுகிறார்.

நமக்கு நாக்கும், செவியும், கண்ணும் இருக்கின்றன. எனவே, இறைவன் நம்மோடு இருக்கிறான். இந்த உறுப்புகள் இல்லாமல் வாழ்வு நிறைவு பெறுமா? இறைவன் இல்லாத வாழ்வு நிறைந்த வாழ்வு ஆகுமா?

இறைவன் நாக்கு, செவி, கண் ஆகியவையாக நம்மிடையேஇருப்பதால் நாம் வாழ்க்கையில் எவ்வளவு கவனமாக இருக்கவேண்டும்? இப்படிச் சொல்லுவது உணர்வு உடையவர்களுக்குத்தான். உணர்வு இல்லாதவர்களுக்கு ஒன்றுமே இல்லை.

வேறு எந்த உறுப்பைப் பத்திரமாகப் பாதுகாக்காவிட்டாலும் சரி; நாக்கு ஒன்றையாவது மிகவும் பத்திரமாகப் பாதுகாக்கவேண்டும். நாக்கு இருக்கிறது என்பதற்காக எதையும் எப்படியும் பேசினால், அதனால் அவர்களுக்குக் கடுந்தண்டனை (உடல் தண்டனை, மனத் தண்டனை) காத்திருக்கிறது.

ஒரு செயலுக்கு விளைவும் பயனும் உண்டு என்பது அறிவியல் கோட்பாடு. வாழ்க்கைத் தத்துவமும் அதுதான்.

இன்னொன்றையும் இங்கே நாம் சிந்தனைக்குக் கொண்டு வரவேண்டும். ஒருவர் தவறாகப் பேசலாம். அவதூறாகப் பேசலாம். அதைப் பற்றிக் கவலைப்படவேண்டிய அவசியம் இல்லை. ஏன்? யார் தவறாகப் பேசுகிறாரோ அவர் பொதுப்படையாகப் பேசினாலும் கவலை இல்லை. ஏன்?

அவர் அப்படிப் பேசுகின்ற வரையிலும் தாம் கூறுவதற்குப் பொறுப்பேற்றுக் கொள்ளவில்லை. எனவே அவரது பேச்சு பொறுப்பற்ற பேச்சு. பொறுப்பற்ற பேச்சுக்கு ஒரு நாளும் செவி சாய்த்துக் கவலைப்பட வேண்டாம்; அவசியமும் இல்லை.

அவர் அவ்வாறு பேசுவதற்குப் பொறுப்பு ஏற்றுக்கொள்கிறாரா? என்பதைக் கவனிக்க வேண்டும். எங்கே வேண்டுமானாலும் அவர் தாம் சொன்னதைச் சொல்வாரா என்பதில் தான் அவர் வார்த்தையின் மதிப்பு அடங்கியுள்ளது. பொறுப்பு ஏற்றுக்கொள்கின்ற பேச்சுக்கு மதிப்பு உண்டு.

சொல்லுகின்ற ஆளைப் பொறுத்துத் தான் அவர் பேச்சுக்கு மதிப்புக் கொடுப்பது மரபு. எல்லாவகையிலும் சிறந்த ஒருவரின் பேச்சுக்கே மதிப்பு உண்டு என்பதையும் இங்கு எண்ணவேண்டும்.

இதுதான் உண்மை. ஒழுக்க நீதி (Moral Justice), சட்ட நீதி (Legal Justice) இரண்டு வகையிலும் இதுதான் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகும்.

---

## செய்திகள்

**நிகழ்பவை**

செப்டம்பர் மாதம் 18ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று சென்னை புரசவாக்கம் ஸர். M. C. T. முத்தைய செட்டியார் மாணவர் உயர்நிலைப்பள்ளியில் காலை 10 மணி முதல் மாலை 4-30 மணி வரையிலும் ஒரு நாள் அந்தர்யோகம் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** நடாத்துவார்கள்.

அக்டோபர் மாதம் 10ஆம் தேதி திங்கட் கிழமையன்று மேட்டூர் தாலுகா சின்னத்தண்டாவில் ஸ்ரீ ராமகிருஷ்ண குருகுல உயர்நிலைப் பள்ளியில் மாணாக்கர்களுக்கு **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** அந்தர்யோக முறையில் அருளுரை வழங்குவார்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றும் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பதினொன்றும் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்சரி
ஆறும் பதிப்பு-பிரசார விலை ... 2-75
தினசரி தியானம்-பதிமூன்றும் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00

தாயுமானவர் இயற்றிய
பரிபூரணானந்தம் ஷை ... 3-00
கருணாகரக்கடவுள் ஷை ... 2-00
மௌனகுரு வணக்கம் ஷை ... 1-50
பரசிவ வணக்கம் ஷை ... 0-50
விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
சந்நியாசி ... 1-25
பஜனைப் பாடல்கள் ... 1-25
குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
இராவணத் தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
ஹரிச்சந்திரன் (நாடகம்) ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
அறம் வளர்த்த நம்பி ... 0-95
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80
நன்மக்களைப் பெறுதல் ... 0-80
தானவீரன் கர்ணன் (நாடகம்) ... 0-80

பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ரூ. 0-80
பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறை வணக்கம் ... 0-75
*ஆத்ம சக்தி ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
*மனிதனது நிஜசொரூபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
ஸ்ரீ ராமகிருஷ்ணஷ்டோத்தர சத
நாமாவளி: ... 0-50
சைவன் யார்? ... 0-50
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) ... 0-15

The Bhagavad Gita (8th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 5-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (with plastic-
cover) ... 4-50
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of
Vivekananda (with plustic cover) ... 3-00
The Bhagavad Gita (Small Size)
(With plastic cover) ... 3-00
Sri Vishnu Sahasranama Stotram ... 2-50
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபாற் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரிக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை–639 115, திருச்சி Dt.

# श्री ललिताम्बिकासहस्रनामस्तोत्रम्

# SRI LALITHAMBIKA SAHASRANAMA STOTRAM

( With Namavali )

( Introduction, English Rendering and Index )



BY

**SWAMI VIMALANANDA**

This book is a companion volume of Sri Vishnu Sahasranama Stotram by the same author.

CROWN 8VO — 376 PAGES — HALF CALICO BOUND

**Price Rs. 8-00**  **Postage Rs. 2-50**

SRI RAMAKRISHNA TAPOVANAM
(PUBLICATION SECTION)
TIRUPPARAITTURAI - 639 115, TIRUCHIRAPALLI DT.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.